ருர்கோ"

வை. இளஞ்சேரன்

ய

# முல்லை மணக்கிறது

கலைக்குடில் வெளியீடு

பொன் தாலி!

வெள்ளி விளக்கு!

—மங்கலச் சின்னங்கள்.

"கவிஞர்கோ"
நாவை. இளஞ்சேரன்
ழுதிய

# முல்லை மணக்கிறது



கலைக்குடில்
வெளியீட்டகம்
நாகப்பட்டினம்

[illegible]-00

கலைக்குடில் வெளியீடு 6

உரிமை ஆசிரியர்பாலது

முதற்பதிப்பு :
திரு. ஆ. 2009-வைகாசி
மே - 1978



அச்சேற்றம் :
குருகுலம் அச்சகம்,
திருமறைக்காடு.

என்னிடம் தமிழ் பயின்ற
ஏற்றமார் புலவர்க் கெல்லாம்
பொன்னிடம் உளத்தி லுண்டு
பொலியுமிந் நூலும் அன்னார்
மன்னுளந் தன்னில் வைத்தேன்
மலரொன்று சூட்டு தல்போல்
தொன்னலத் தமிழால் அன்னார்
தோன்றிசை நிலைத்து வாழ்க.

— கோவை. இளஞ்சேரன்

# முல்லை மணக்கிறது.

**தோழி :** என்னேடி, கும்மென்றிருக்கிருய்?

**தலைவி :** குமரிப்பெண் கும்மென்றில்லாமல் உம்மென்ரு இருப்பாள்? கும்மென்றிருப்பது தெரிந்த உனக்கு 'கம்'மென்று மணப்பது படவில்லையோ?

**தோ :** என்னேடி, புதிர் போடுகின்ருய்? இங்கு, எங்கும் எந்த மலரும் இல்லை. இருவரும் இன்னும் நீராடாத தால் மலரைச் சூடவில்லை. மணக்கிறதாம்; அதிலும் 'கம்'மென்று மணக்கிறதாம். என் மூக்கு மட்டும் தூங்குகின்றதோ?

**த :** ஆகா, என்ன இனிய மணம்! மெல்லிய மணம் இன்பத்தைக் கெல்லுகின்றதே!

**தோ :** அந்த வகை மணமோ? இன்பமா? காதற் பொன்னே! என்ன நடந்தது? ஒளிக்காமற் சொல்லடி!

**த :** உன்னிடம் ஒளிப்பேனு என்ன? கேளடி, கேள். ஒரு திங்களுக்கு முன், ஒருநாள்....

**தோ :** அமைதியான இரவு

**த :** அதுதான் இல்லை. இரைச்சலான இரவு. தட்டையான பறை முழங்குவது போன்று இரைச்சல் எழுந்த இரவு. பொன்னைப் பனிக் கட்டியில் குழைத்து இந்த உலகத்திற்கு முலாம் பூசிக்கொண்டிருந்தது முழு நிலவு.

**தோ ;** இரைச்சல் என்ருயே, முலாம் பூசிய இரைச்சலோ?

த : இடையே குறுக்கிடாதே. அவர் நாட்டுச் சுனையை நீதான் பார்த்திருக்கின்ருயே. அது அழகானது. நீல மணிகளை இட்டு வைக்கும் கிண்ணத்தில் மேல் மட்டம் வரை மணிகளைப் பெய்து நிரப்பினல் எவ்வாறு காட்சி தருமோ அதுபோன்று அச்சுனை காட்சியளித்தது. அதில் உரிமையுடன் உலாவிய தேரை ஒன்று தனது பிளந்த வாயைத் திறந்து முழக்கியது. அதுதான் அமைதியைக் கலைத்தது. என்ருலும் அதை நான் வெறுக்கவில்லை. அது அவர் நாட்டுத் தேரை அன்ருே?

தோ. : உன் காதுகளுக்கு மட்டும் யாழ் இசையாக இனித்திருக்குமே.

த. : இனிக்காதா என்ன? மேலே கேள்! அங்கு.... அன்று....

தோ. : அவர்....

த. : போடி, நான் சொல்லுகிறேன் கேளடி. அவர் வந்து.... அவர் முதலில் என்னை.... என்னை....

தோ. : தழுவினர்....

த. : நானுந்தான் (ஒரு நெடு மூச்சு இழுக்கின்ருள்)

தோ. : இடையில் ஒரு நெடு மூச்சு விட்டாயோ?

த. : இது நெடுமூச்சில்லையடி. மூக்கால் உறிஞ்சி மணத்தைச் சுவைக்கின்றேன்.

தோ. : மீண்டும் மணமா?

த. : மணந்தால்—தழுவினல்—மணக்காமலோ போகும்?

தோ. : என்ன மணமோ?

த. : முல்லை மணம்.

தோ. : மலரில்லாமலே மணந்ததோ?

த. : மலர் எதற்கடி? அதுதான் வியப்பு. அவர் என்னைத் தழுவினாரன்றோ? அப்போது அவரது உடலே முல்லை மணத்தை வழங்கியது. அவரைத் தழுவிய எனது உடலில் அம்மணம் பற்றிப் பரவியுள்ளது. ஆகா! இன்றும் மணக்கின்றதடி. (ஒரு நெடு மூச்சு)

தோ. : ஒரு திங்களுக்கு முன் தழுவியது இன்றும் மணக்கின்றதோ?

த. : இன்றுமட்டுமென்ன? என்றும் மணக்கும். உடலில் மட்டுமென்ன? நினைவிலும் மணக்கும்; கனவிலும் மணக்குமடி.

தோ. : அப்படியோ?

த. : சில நாள் போனால் இவ்வாறு மணக்கின்ற உண்மை உனக்கும் புரியும்.

தோ. : போடி.

இவ்விரண்டு குமரிகள் உரையாடியதை எங்கோ இருந்து கேட்டார் ஒரு புலவர் பெருமகனார். ஏடெடுத்தார்; எழுதினார்:

[1] "மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை,
தட்டைப் பறையிற் கறங்கும் நாடன்
தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவில்
மணந்தனன் மன்னென் தோளே;
இன்றும் முல்லை முகைநா றும்மே.

– இப்பாடலை எழுதிய கை

---

1 குறுந்தொகை : 193.

புலவர் அரிசில்கிழாரது கை. இம்முல்லை மணம், குறுந்தொகை என்னும் நூலில் இன்றும் மணக்கின்றது.

குமரிப்பெண் இன்பத் தினவில்தான் பேசினாள். ஒரு திங்கள்வரை மணப்பது அவளது காதற்களிப்பின் நிழலாட்டந்தான். ஆனாலும், அவளது பேச்சில் அரிசில்கிழார் ஓர் உண்மையை மின்னவிட வைத்துள்ளார்.

அவன் தழுவினான். மலர் மாலை ஏதும் அணியாமல் தான் தழுவினான். அவனது உடல் தழுவியதால் இவளது உடலில் முல்லை மணம் வீசுகின்றதாம். ஏது அந்த முல்லை மணம்?

—இதனில்தான்

அரிய உண்மை ஒன்று துவங்குகின்றது.

அவன் கட்டிளமை கலையாதவன். இயற்கைப் பருவத் தன்மை இயைந்து நிற்கும் 'விடலை' அவன். மணம் ஆகாத பெண் 'கன்னி' எனப்படுவாள். மணம் ஆகாத ஆண் 'விடலை' எனப்படுவான். ஆம், இந்த விடலையை இதற்கு முன் காமக் குறும்பு என்னும் வண்டு குதறியதில்லை. முதன் முதலில் இவளைக்கண்டுதான் காதல் முகிழ்த்தது. காம அலைபாயும் உள்ளத்தால் அங்கங்கே உலா வந்தவனல்லன் அவன். தென்றல் போல் கண்ட மலரை எல்லாம் சுவைத்த கோவலன் அல்லன் அவன். தூய — அமைதியான — நெறியில் நின்ற விடலை. அதனால் அவனது உடலில் இயற்கையாகவே முல்லை மணம் ஊறியது. இயற்கை முல்லை மணம், தூய விடலை என்பதற்கு ஒரு முத்திரைச் சின்னம்.

ஆம், விடலைப் பருவத்தை விடாது காக்கும் கட்டிளைஞன் உடல் முல்லை மணம் வீசும் என்பதை மேலே கண்ட பாடல் குறிப்பில் இசைக்கின்றது.

உடல் முத்திரை இலக்கணத்தைப் பேசும் நூல்களும் இக்கருத்தை ஒப்புகின்றன.

வள்ளலார் இராமலிங்க அடிகளார் களைந்து போட்ட ஆடை மணந்ததாக அவருக்கு அணுக்கமாயிருந்தோர் கூறியுள்ளனர். அம்மணமும் முல்லை மணமாக இருக்கலாம். அடிகளாரது விடலை ஒழுக்கத்தை—தூய்மையை நாம் அறிவோம்.

விவேகானந்த அடிகளார் களைந்து போட்ட உடை முல்லை மணம் வீசியதாகக் கூறுவர்; எழுதியுள்ளனர்.

இவைபோன்ற செவிவழிச் செய்திகள் பல. தமிழ் மருத்துவ முறைகளில் இக்கருத்து குறிக்கப்படுகின்றது.

எனவே, நெறியில் நிற்கும் இள ஆடவர் உடல் மணக்கும் என்பதும் அந்த மணம் முல்லை மணம் என்பதும் அரிசில் கிழார் மலர்த்திய உண்மை.

ஆண்டாள்நாச்சியார் ஆன்ம உலகில் ஒரு காதற் பேழை; கண்ணனுக்காகக் கலங்கிய ஏழை. கண்ணனைத் தழுவத் துடித்த அந்தக்கன்னி கனவு கனவாகக் கண்டாள் அவனது இதழ்களை முத்தமிட்டுச் சுவைக்கத் துடித்தாள். அவன் சங்கை வாயில் வைத்து ஊதினவன். அவனது இதழ்கள் பட்ட சங்கின் பேற்றை எண்ணினாள். அந்தச் சுவையில் அந்தச் சங்கிடமே வினவினாள்.

> [2] "கற்பூரம் நாறுமோ?
> கமலப்பூ நாறுமோ? திருப்பவளச்செவ் வாய்தான்
> தித்திக்குமோ?"

என்று வினவி இன்பமடைகின்றாள். அவளது உள்ளத்தில் கண்ணனது உடலில் கற்பூர மணமும் தாமரை மணமும் தோன்றின. தெய்வத் தொடர்பில் கற்பூரமாக நினைத்தாள். அவன் மென்ற தம்பலத்தில் பச்சைக் கற்பூரம் இட்டுக்கொண்டவன். அந்த மணமாகவும் கருதியிருக்கலாம் "கையுங் காலும் முகமும் தாமரை" யாக வண்ணிக்கப்படுவதால் 'தாமரை மணக்குமோ' என்றாள்.

---

2 நாச்சியார் திருமொழி: 7: 1.

6

மாந்தர் பாங்கில் முல்லை மணம் கட்டிளமையின் கலை யாச்சின்னம். அவனுக்கு அன்றுவரை மணக்கும். இவளுக் கோ இன்றும் மணக்கின்றது; என்றும் மணக்கும்.

அவ்வாறுனால் பெண்களின் உடலில் மணமிருக்காதோ என்றொரு ஐயம் எழுதல் இயல்பு. அந்த ஐயம் இன்றியமை யாததுங்கூட. இதற்கு விடையாக "கொங்குதேர் வாழ்க்கை" பற்றி எழுந்த பூசல் சான்றுக்கு வருகின்றது. பாண்டிய மன்னனது பட்டத்தரசி கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டு என்பது இறையனார் என்னும் புலவரது கருத்து. மற்று மொரு சான்றாக மாதவி வருகின்றாள். காட்டு வழியில் கோவலனிடம் கோசிகன் என்பான் மாதவி தந்த முடங்கலை வழங்கினான். பெற்ற கோவலன் அம்முடங்கல் முடக்கிப் பொதிந்துள்ள இடத்தை மோந்தான். அது மணந்தது. மாதவி முடங்கலைப் பொதிந்து அரக்கிடுவது போன்று சாந்தால் மூடி முத்திரைவைத்தாள். தனது கூந்தலை அழுத்தி அனுப்பியிருந்தாள். அந்தக் கூந்தலின் மணத்தைக் கோவலன் மோந்து அடையாளங் கண்டுகொண்டான். தழுவிப் பழகிய மாதவியின் உடல் கூந்தலின் மணம் மாதவியது மணத்தை நினைவில் நிறுத்தியது. இலக்கியங்கள் பலவும் மகளிரை மணம் வீசும் மலர்களாகக் குறிக்கின்றன. எனவே, மகளிரும் மணக்கும் உடலினராவர். ஆனால், கன்னிப் பருவத்தில் மட்டுமன்று. கற்புக் கலையாதவரை-பிற ஆடவரை எண்ணா தவரை-எண்ணிக் கூடாதவரை அவர் மணக்கும் மலரே யாவர். மகளிரது உடலமைப்பாலும் பருவ ஊற்றத்தாலும் ஒழுக்க ஏற்றத்தாலும் நான்கு வகைப்படுவர் என உடல் முத்திரை இலக்கண (சாமுத்திரிகா இலக்கணம்) நூல்கள் பகுத்துப்பேசும். பதுமினி முதலிய அந்நால் வகையினர் உடலும், தாமரை முதலிய நான்கு மணம் வீசும் என அந்நூல் கள் குறிக்கின்றன. ஆடவரது உடல் மணமும் கற்புடைய பெண்டிரது நற்றொடர்பால் முல்லை மணம் மாறினும் மற்றைய மணத்தில் திகழ்வதுமாகும்.

# 7

## இயற்கையின் பரிசு

மணம் என்றதும் நம் நினைவில் முந்துவது மலர்தான். தமிழ்ப் பெருமக்களாகிய நமது முந்தையர் வாழ்வியலில் மலரைப் பயன்படுத்திக்கொண்டதிறம் நயப்பும் வியப்பும் நல்குவதாகும்.

தமிழர்தம் வாழ்வியல் உலகிற் புதுமையானது; நெறி கொண்டது; தனிச்சிறப்புடையது. வாழ்வியலுக்கு இலக்கணம் வகுத்துள்ள பாங்கு தமிழ் பெற்றுள்ள தனிப்பாங்கு என்பது உலகோர் உணர்ந்துள்ள உண்மையாகும்.

வாழ்வியலின் நெறியைத் தமிழர் 'திணை' என்னும் சொல்லால் குறித்தனர். 'திணை' என்பதற்கு ஒழுக்கம் என்று பொருள். செயலை—நற்செயலை—ஒழுகும் நற்செயலை-கடைப் பிடித்து ஒழுகும் நற்செயலைத் தமிழர் ஒழுக்கம் எனக் குறித் தனர். அவ்வொழுக்கத்தை-திணையை அகத்திணை, புறத் திணை என இரண்டாக இயற்கைப்போக்கில் கண்டவர் தமிழர்.

இவ்விரண்டையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் நமது கையிலும் காணலாம்:

கை, அகங்கை புறங்கை என்னும் இரண்டு அமைப் பினது. அகங்கை போன்றது அகப்பொருள்; புறங்கை போன்றது புறப்பொருள். அதனிலும் ஒரு நயமான பொருத்தம் உண்டு.

அகங்கை, உள்ளே மட்டும்; முடங்கும்
அகப்பொருளும் உள்ளத்தே அடங்குவது
உணர்வாலும் உள்ளிடம் கொண்டது;
வீட்டு வாழ்வாலும் உள்ளிடம் கொண்டது
அகங்கையின் மென்மைபோன்றே
பெண்மை சிறந்து நிற்கும் அகப்பொருளும் மென்மையானது

காமமும் மெல்லிதன்றே?
புறங்கை வெளிப்புறமாக மடங்காது; முடங்காது
அகன்று விரிந்து காட்சியில் நிற்பது
புறப்பொருளும் வெளியுலகில் விரிந்து செயற்படுவது

கைவிரல்களும் இப்பொருத்தத்தில் தொடர்கின்றன. விரல்கள் ஐந்து. ஐந்து விரல்களும் தமக்குள் முரண்படாமல் ஒன்றையொன்று தழுவிநின்று செயற்படும். அகப்பொருளில் அன்பால் ஒன்றிய ஒழுக்கத்தை ஐந்தாகக் கண்டனர். அதனை "அன்பின் ஐந்திணை" என்றனர்.

"கை" என்னும் சொல்லுக்கு உறுப்பைக் குறிக்கும் பொருள் மூலமானது அன்று. அப்பொருள் 'செயலுக்குப் பயன்படும் உறுப்பு' என்பதால் அமைந்தது. 'கை' என்பதற்குச் 'செயற்பாடு' – 'ஒழுக்கம்' என்பதே முதற் பொருள். இப்பொருளை,

[3] பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்" - என்னும் குறளினும் காணலாம். அன்பின் ஐந்திணையை இரண்டாக வகுத்துக் கூறும் நாற்பா

[4] "களவு கற்பென இரு கைகோள் வழங்கும்" - என்பது

[5] "திணையே கைகோள் பொருள்வகை என" எனவும்

[6] "திணையே கைகோள் கூற்றே கேட்போர்" எனவும்வரும் இவற்றின்கண் அமைந்த, கைகோள் என்னும் சொல்லுக்கு ஒழுக்கத்தைக் கொள்ளும் முறை என்பது பொருள்.

மேலும் 'கை' என்னும் சொல் தொழிற்பெயர் விகுதி ஒன்று. அது வாழ் என்னும் முதல்நிலையுடன் கூடி

936 [4] நம்பிஅகப்பொருள் ; 26
யம்; பொருள் : 310
ளவியல் : 56

வாழ்க்கை என்றாகி வாழும் செயற்பாடு — வாழும் ஒழுக்கம் எனப் பொருள்படுகின்றது.

அவ்வாழ்க்கை உள்ளத்து உணர்வின் வாழ்வு, புறத்து நடப்பு வாழ்வு என இரு வகையில் அடங்கும். இவ்விரு வகையே இல்லத்தில் இருந்து வாழும் வாழ்க்கை என்றும், வெளியுலக வாழ்க்கை என்றும் அமையும். இவ்வமைப்பைக் கூர்ந்து உணர்ந்த தமிழர் அகம், புறம் என வகுத்து இலக்கண இலக்கியம் படைத்தனர்.

இயற்கைப் பாங்கில் அமைந்த இவ்வாழ்வியலில் இயற்கையில் மலர்ந்த மலரைத் தமிழர் இணைத்துக்கொண்ட திறம் அறிவால் மோந்து சுவைக்கத் தக்கது. உலகில் பல இனத்தினரும் மலரைப் பயன்படுத்துகின்றனர். சிறப்பாகவும் பயன்படுத்துகின்றனர். ஆனல், வரையறையுடன் — இயற்கைப் பாங்கு வாடாத வரையறையுடன் இசைந்து வரும் இலக்கணமாக்கி மலரைக் கொண்ட திறம் தமிழர் தம் தனித்திறம் ஆகும்.

வாழ்வியலை அகம், புறம் ஆக்கி அவற்றை முறைப்படுத்தி வகைப்படுத்தி விரித்த தமிழர் அவ்வகைகளின் சின்னங்களாக மலரைக் கொண்டனர். அகத்தைக் குறிஞ்சி மலர், முல்லை மலர், மருத மலர், நெய்தல் மலர், பாலை மலர், என மலர்களைக் கொண்டே பெயர் சூட்டினர். புறத்தையும் வெட்சி மலர், கரந்தை மலர், உழிஞை மலர், நொச்சி மலர், வஞ்சி மலர், காஞ்சி மலர், தும்பை மலர், வாகை மலர், என மலர்களாலேயே வகை செய்து பெயர் சூட்டி மகிழ்ந்தனர்.

மலர்கள் யாவும் மணம் பரப்புவனவே. அம்மணத்திலும் விருப்பத்தைக் கவரும் நறுமணம் உண்டு, விருப்பைத் தொடாத வெறும்மணமும் உண்டு. அகத்திற்கும் புறத்திற்கும் அமைக்கப்பட்ட மலர்களை ஒருமுறை மேற்போக்காக நோக்கினும் அகமலர்கள் நறுமணங்கொண்டவையாகக் காணலாம். அத்துடன் அவை என்றும் மணங்கருதிச்

சூடப்படும் மலர்கள். புறமலர்கள் சிலபோதுமட்டும் சின்னத்திற்காகச் சூடப்படும் மலர்களாக உள்ளன. இவை மணங் கருதிச்சூடா மலர்கள்.

ஒவ்வொரு கடவுளர்க்கும் ஒவ்வொரு மலர் உண்டு. மலரோன், தாமரையான், தாமரையினள், அலர்மேல்மங்கை எனப் பல மலரால் கடவுளரது பெயரைக் கண்டனர். வள்ளுவப் பெருந்தகை இறைவனை உருவகப்படுத்தியவர் "மலர்மிசை ஏகினன்" என்று இறைவனை மலர் மேல் நடக்க வைத்தார். மன்னர்க்கு அடையாளப் பூக்கள் அமைந்தன.

மக்கள் வாழ்விலும் மலர் பெற்ற இடம் – மலரைத் தமிழர் தழுவிக்கொண்ட திறம் தேனாய் இனிப்பதாகும். மக்கள் உடலில் மணம் அமைவது என்பது சிறப்பாக இயற்கையில் அமைவது; பொதுவாகச் செயற்கையில் அமைவது. செயற்கையில் நாம் இணைத்துக்கொள்ளும் மணம் மலர்களாலும், மணப்பொருள்களில் ஊறிய நீரில் நீராடுவதாலும், மணப் பூச்சுக்களாலும், மணச் சுண்ணத்தாலும் உண்டாவது. தமிழர் அச்செயற்கையிலும் இயற்கை மலரையும், மலர்த் தாது என்னும் மலர்க்கருவின் மெல்லிய பொடியையும் கொண்டனர். இப்பொடி நாம் இக்காலத்துப் பயன்படுத்தும் "பவுடர்" - மணத்தூள் போன்றது. சூடும் மலர்கள், சூடா மலர்கள் எனவும் அவற்றின் மணங்கருதிப் பாகுபடுத்தினர். மலரின் அழகு ஒன்றை மட்டும் கருதிச் சூடிக்கொள்வதில்லை. கண்டவுடன் கவர்ந்து இழுத்து ஓடிப்போய் அள்ளிக் கொள்வதுபோன்ற அழகு மலராயினும் மணமின்றேல் அது சூடும் பூ அன்று என்பதை,

> 7 "அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினும்
> கள்ளிமேல் கைநீட்டார் சூடும்பூ அன்மையால்"
>
> – என்னும் பாடல்

மணமில்லா அழகை ஒதுக்கிப் பாடுகின்றது.

---

7 நாலடியார்: 262

சூடும் மலர்களிலும் ஆய்ந்தெடுத்தே சூடுவர். மகளிர் பெரும் பழக்கமாக தலையில் தனி மலராகவும் சூடுவர்; கோத்த கோவையாகவும் சூடுவர். நீராடியதும் ஒன்றிரண்டு மலர்களைச் சூடிக்கொள்வர். கழுத்தில் மாலையாக அணிவது சிறு பான்மையாகவும், மங்கல நிகழ்ச்சியினதாகவும் அமைந்தது. ஆடவர் தலைக் குஞ்சியில் சுற்றி அணிவர். மார்பில் தோளில் படியுமாறு அணிவர். பெருஞ்செல்வரும் மன்னரும் நீராடியதும் மலராகும் பக்குவத்திலுள்ள போதுகளால் ஆன மாலையை அணிந்துகொள்வர். போது விரிந்தால் வண்டு அதன்கண் உள்ள தேனைப் பருகிவிடும். தேன் போனால் மணம் குறைந்ததாகும். எனவே, போதுகளால் கட்டிய மாலையை அணிந்து அது விரிந்து மார்பிலோ தோளிலோ மலராகி மணம் ஊட்டுவதை விரும்பினர். அவ்வாறு மார்பில் மலர்ந்த மாலையை வண்டுகள் சூழ்ந்து மலரில் அமைவதை இலக்கியங்கள் பேசுகின்றன.

ஆடவர் மார்பிலும் தோளிலும் அணிவதோடு தோளிலும் கையிலும் சுற்றி அணிந்துகொள்வதுமுண்டு. காதில் பூவைச் சூடிக்கொள்வர். இதனை, பெருமாள் திருமொழி,

[8] "மங்கல நல்லன மாலை மார்வில்
இலங்க மயில்தழைப் பீலி சூடி,
பொங்கிள ஆடை அரையிற் சாத்திப்
பூங்கொத்து காதிற் புணரப் பெய்து"
- எனக் காட்டுகின்றது.

மகளிரும் காதிற்பூவைச் சூடுவர். காதலன் காதலியின் காதில் நீலப்பூவைச் சூட்டிப் பார்ப்பான். இதனை நைடதம்,

[9] "கோதை மார்பன்ஓர் கோல்வளை காதினில்
மாதர் நீலம் புனைதலும்" – எனப் பாடுகின்றது.

---

[8] பெருமாள் திருமொழி : 6: 9.
[9] நைடதம்: போதுகொய் படலம் : 13.

10 "மாதர் நுழைமருங்குல் நோவ மணிக்குழைசேர்
காதில் மிகைநீலம் கைபுனைவீர்"
— எனத் தண்டியலங்காரமும் எடுத்துக்காட்டுகின்றது.

இக்காலத்தும் காதில் செருகிக்கொள்வதை அருகிக் காண்கின்றோம்.

மலர்கள் மாலையாயின. மாலை என்பது பொதுப்பெயர். தொடுக்கப்படுவது தொடை; தொடையல். தொங்கி அசைவது தொங்கல். அடியில் இணைக்கப்படாமல் தோளில் புரள்வது தார். விரிந்த மலரால் ஆகியது அலங்கல். தலையில் ஆடவர் சூடுவது கன்னி. மகளிர் தலையில் சூடுவது கோதை. ஆடவர் கோதையை மார்பிலும் அணிவர். இதனைக் 9 "கோதை மார்பிற் கோதையானும்" எனப் புறப்பாட்டு காட்டு கின்றது. கோதையை அணிந்த மன்னன் 'கோக்கோதை மார்பன்' எனப்பட்டான். கோதை பெண்ணைக் குறிக்கும் சொல்லாயிற்று.

மாந்தர் சூடும் தொடர்பில் மலர் நெருங்கியது போன்று புலவர்கள் தம் மொழியை மலராகவே கொண்டனர்.

11 "பழுதகன்ற நால்வகைச்
சொல்மலர் எடுத்து" – எனச் சொல்லை மலராக்கினர். பூவாலாகியது பூமாலை. பாவாலாகியது பாமாலை எனப் பட்டது. தெய்வப் பாமாலை தே ஆரம்-தேவாரம் எனப் பட்டது. மாங்குடி மருதனார் என்னும் புலவர் தமிழையே மல்லிகை மாலையாகத் தொடுத்தார்.

சொல் மலராம்; பொருள் தாது ஆகி மணமாம்; பாண்டியன் வண்டாம், அப்பாண்டியனும் குளிர்ந்த தார் அணிந்தவனும், இதனை,

---

10 தண்டியலங்காரம்: சான்று வெண்பா 11 புறநானூறு: 48

[12] **"சொல்லெனும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்**
**நல்லிருந் தீந்தாது நாறுதலால் – மல்லிகையின்**
**வண்டார் கமழ்தாம மன்றே; மலையாத**
**தண்டாரான் கூடல் தமிழ்."** – இது பாமாலையில் ஒரு மல்லிகை மாலை. செய்யுள்களின் தொடர் திருவள்ளுவ மாலையாயிற்று. மாலை என்னும் நூல் வகை சிற்றிலக்கிய வகைகளுள் உள்ளன. இரண்டை மணி மாலை, மும்மணி மாலை, நான்மணி மாலை முதலிய பலவகை நூல்கள் மாலையின் பெயரால் பிறந்தன. "குறிஞ்சிப்பாட்டு", "முல்லைப்பாட்டு" என்னும் மலர்ப் பெயராலமைந்த நூல்கள் இரண்டு பத்துப் பாட்டில் இடம் பெற்றுள்ளன.

மாந்தர்தம் உறுப்புகள் பலவற்றிற்கும் மலரையே உவமையாகக் கொண்டனர். இலவம்பூ வாய் இதழுக்கு உவமையாயிற்று. அதனால் வாய் மலராயிற்று. அந்த வாய் பேசுவதைத் "திருவாய் மலர்ந்தார்" எனக் குறித்தனர்.

பெருக்கத்திற்கு அஞ்சி இத்துடன் நிறுத்தலாம். முற்றும் கூறின் ஒவ்வொரு தனி நூலாகும். அத்துணை அளவில் செய்திகள் மலர்பற்றி மாந்தர் தொடர்பில் உள்ளன.

மாந்தர் இயற்கையைப் பல்வகையிலும் பயன்படுத்துகின்றனர். மலரைப் பொறுத்தவரை இன்பம், துன்பம் ஆகிய எதற்கும் கொள்கின்றனர்.

மலர் மாந்தர் பெற்றுள்ள இயற்கையின் பரிசு
இயற்கைப் பரிசுகளில் முதன்மைப் பரிசு.

## ஏழு பிறப்பு

மக்களது வாழ்வை மணக்கச் செய்யும் மலருக்கும் வாழ்வு உண்டு. மாந்தன் பிறந்து வளர்ந்து சிறந்து மறை-

---

[12] திருவிளையாடற்புராணம்: நாமகள் வாழ்த்து.

கின்றான். மலரும் அரும்பி, மலர்ந்து மணந்து வாடிச் சருகா கின்றது. மாந்தர்க்குப் பருவங்கள் உண்டு. மலருக்கும் பருவங்கள் உண்டு. பருவ வகையை மலரைப் பார்த்துத் தான் அமைத்துக்கொண்டாரோ என்று ஐயங்கொள்ளும் அளவு மாந்தர்க்கும் மலர்க்கும் ஒற்றுமை உண்டு.

*தனி யொருவன் மாந்தன்; தனியொன்று மலர்; பூ. மக்கள் தொகுதி, மன்பதை; மலரின் தொகுதி இணர், துணர், தொத்து, கொத்து.*

மலரின் பொதுப்பெயர் பூ. அதன் தோற்ற வளர்ச்சி யில் பருவ மாற்றங்கள் உள்ளன. மலருக்கென அமைந்த சொற்களே அவற்றைச் சொல்கின்றன. மலரைக் குறிக்க எழுந்த சொற்கள் பல. ஒவ்வொன்றிற்கும் நுணுக்கமான பொருள் வேறுபாடு உண்டு. அவ்வாறுள்ள வேறுபாடு அதன் பருவக் குறிப்புக்களாகும்.

*செடியில் நனைப்புடன் (நீர்ப்பிடிப்புடன்) முளைத்து வருவது நனை. நனை வளர்ந்து முனைப்பது அருப்பு; அரும்பு பருத்து இதழ்கள் கட்டவிழ்வது முகை: (இஃதே முகுளம், மொக்குள், மொட்டு எனப்படும்) மலரும் பொழுதைக் கொண்டது போது (பொழுதை அறிவிப்பதாலும் இப் பெயர் பெற்றது; இது போகில் எனும் சொல்லாலும் வழங்கப்படும்.)*

இவ்வாறு மலரின் வளர்ச்சியில் ஏழு படிகள் அமை கின்றன. அவை ஏழும் மலரின் ஏழு பருவங்கள்.

[13] தமிழில் மகளிர் பருவங்களையும் ஆடவர் பருவங்களை யும் இலக்கணமாக வகுத்து இலக்கியங்கள் படைக்கப்பட் டுள்ளன. மகளிர் பருவங்கள் ஏழு. ஆடவர் பருவங்கள் ஏழு. மலரின் பருவங்களும் ஏழு. அவற்றைப் பின்வரும் முறையில் பட்டியலிட்டால் பொருத்தம் புலப்படும்.

---

13 பாட்டியல் நூல்கள்.

| மலர் | மகளிர் | ஆடவர் | அகவை |
|---|---|---|---|
| நனை | பேதை | பாலன் | 7 ஆண்டு வரை |
| அரும்பு | பெதும்பை | மீளி | 8–10 வரை |
| முகை | மங்கை | மறலோன் | 14 வரை |
| போது | மடந்தை | திறலோன் | 15 வரை |
| மலர் | அரிவை | காளை | 16 வரை |
| அலர் | தெரிவை | விடலை | 17–30 வரை |
| வீ | பேரிளம்பெண் | முதுமகன் | |

இப்பருவ மாற்றங்கள் வளர்ச்சியின் வரலாறு. ஒவ்வொரு பருவமும் அவ்வரலாற்றின் ஒவ்வொரு பொன் இதழ். ஒவ்வொரு பருவமும் ஒவ்வொரு தனித் தனித் தன்மையை கொண்டது; குணத்தைக் காட்டுவது; பொலிவைக் கொண்டது. ஒரு பருவம் கழிந்து மறு பருவத் தோற்றம் என்பது மக்கள் வாழ்விலும், மலரின் வாழ்விலும் ஓர் இழப்பு, ஒரு பிறப்பு எனலாம். நனை, அரும்பானல் நனைப்பருவம் இழப்பு; அரும்பு பிறப்பு. இதே போன்று பேதை, பெதும்பையானல் பேதை இழப்பு; பெதும்பை பிறப்பு. இந்த இழப்பு பிறப்பையே, இறப்பும் பிறப்புமாகக் குண்டலகேசி ஆசிரியர் வேறொரு வகைக்கு விளக்கினர்.

**14 "பாளையாம் தன்மை செத்தும்,**
**பாலனும் தன்மை செத்தும்,**
**காளையாம் தன்மை செத்தும்,**
**காமுறும் இளமை செத்தும்,**
**மீளுமிவ் வியல்பும் இன்னே**
**மேல்வரு மூப்பு மாகி**
**நாளுநாள் சாகின் றேமால்**
**நமக்குநாம் அழாத தென்னோ?"** – இது நிலையாமைக்கு விளக்கப்பட்ட பாடலாயினும் ஒவ்வொரு பருவ

14 குண்டலகேசி.

இழப்பு அழுதற்குரியது என்பதை அறிவிக்கின்றதாகக் கொள்ளலாம்.

சோவியத் நாட்டின் பழங்குடி மக்களில் ஓர் இனத்தா ரிடையே ஒரு பழக்கம் உண்டு. ஒரு பெண் திருமண நிகழ்ச்சிக்கு முன்னர் தனி ஓர் இடத்தில் அமர்ந்து கண்ணீர் விட்டுச் சிறு பொழுது அழுவாள். அதன்பொருள் அந்தோ! எனது கன்னிப் பருவம் அழிகின்றதே' என்று எண்ணிக் கலங்கும் கருத்தினதாகும். இப்பழக்கம் மரபாகி இன்றும் ஒரு கரணம், நோன்பு போன்று நிகழ்கின்றது.

பருவங்களில் கன்னிப் பருவமும், விடலைப் பருவமும் ஒரு தனி உரிமைப்போக்குடையன. அவ்வுரிமை கழிவது ஓர் இழப்பு தான்; மீண்டும் அது கிடைக்காததால் ஓர் இறப்புதான். இந்தப் பருவச் சாவு மலருக்கும் பொருந்தும்.

[15] "எழுமை எழுபிறப்பு"—என்னும் குறள் காட்டும் 'எழுமை' இந்த ஏழு பருவங்களின் குறிப்பு எனலாம். எனவே, பருவத்தால் மாந்தரும் மலர்களும் தத்தம் வாழ்வில் ஏழு பிறப்புகளை அடைகின்றன.

**மலரின் நறுமணமும்**

**மங்கையின் திருமணமும்**

மலருக்கும் மாந்தர்க்கும் உள்ள தொடர்பில் மலர்க்கும் மகளிர்க்கும் உள்ள தொடர்பு நெருக்கமானது. அவள் பூவால் பெற்ற பெயர் பூவை. தலைமாலையாம் கோதையால் பெற்ற பெயர் கோதை. இரண்டும் இணையப் பெற்ற பெயர் பூங்கோதை. மகளிர் ஒவ்வோர் உறுப்பின் அழகும் ஒவ்

---

[15] திருக்குறள் : 107.

வொரு மலரை உவமையாகக் கொண்டது என்பதை அறிவோம். முகம் தாமரை. கூந்தல்கட்டு வாழைப்பூ. கண் குவளைமலர். மூக்கு எள் பூ. காது காயாம்பூ. இதழ் இலவம்பூ—முள்முருங்கைப் பூ. பல் முல்லை அரும்பு, கொங்கை கோங்கு. கை காந்தள். அடி அனிச்சம். இத்துணை மலர் கள் பூத்த அவள் ஒரு பூங்கொடி.

மலர் காட்சியழகால் கண்ணுக்கு விருந்தளிப்பது. அதனைச் சூழ்ந்த வண்டிசையால் செவிக்கு விருந்து. சுரக்கும் தேறல் வாய்க்குச் சுவை வழங்குவது. மணத்தால் மூக்குக்கு விருந்து. மென்மையால் உடலுக்கு விருந்து. இவ்வாறு ஐம்புலனுக்குரிய மகிழ்ச்சியும் ஒள்ளிய மலரிடம் உண்டு.

[16] **"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள"** – எனத் திருவள்ளுவர் மங்கையிடம் ஐந்தும் கூடிய இன்பம் உள்ளதைக் காட்டு கின்றார். மலரின் தன்மையாலும் மங்கை மலராவாள்.

இந்த ஐந்தொடு மற்றொரு ஐந்தும் பொருந்துகின்றது. காம உணர்வு ஊற்றெழுவதை ஓர் உருவகமாக்கினர். காமத்தை எழுப்புபவன் காமன் என உருவகப்படுத்தினர். அவன் கரும்புவில்லில் ஐந்துஅம்புகளை வைத்து எய்கிறான் என்றனர். அவ்வைந்து அம்பும் ஐந்துமலர்கள். முல்லை அசோகு, குவளை, மாம்பூ, தாமரை என்பன அவை. ஐந்து தன்மைகளால் காமஇன்பத்தில் பொருந்தும் மலர், ஐந்து அம்புகளாக அவ்வுணர்வை எழுப்புவதும் ஒரு பொருத்தமே ஆகும்.

மலருக்கு ஐந்து தன்மைகள் இருப்பினும் அவற்றுள் முதன்மையானது மென்மை எனலாம். அன்பின் பிணைப்பான இல்லற வாழ்வுதான் காதல் வாழ்வாகும். காதல் பிணைப்பால்

---

16 திருக்குறள் : 1101

இருவர்பாலும் எழும் இன்ப அவா—விருப்பம் காமம் எனப் படும். அக்காமம் நெஞ்சில் அரும்பி, உடலில் மலர்ந்து, உள்ளத்தில் மணப்பது. ஐம்புலனுக்கும் காமம் இன்பமென்றாலும் ஒரு புலனால் மட்டும் உணர இயலாத அளவு நுண்மையானது. நுண்மையிலும் மென்மையானது. அம்மென்மையைக் குறிக்கத் திருவள்ளுவப்பெருந்தகையே முனைந்தார்.

[17] "மலரினும் மெல்லிது காமம்" என்றார். அதனால், காமம் மிகச் செவ்விது என்று குறித்து அந்தச் செவ்வியை உணரத் தலைப்படுவது எல்லாராலும் இயலாத ஒன்று என்று முடிவு கட்டி,

"சிலரதன் செவ்விதலைப்படு தார்"
– என நிறைவேற்றினார்.

மெல்லிய காமத்தின் தொடக்கம் இனம் புரியாத மயக்கம் தருவது. இன்ப மாத்திரைக்கு முன் பூசும் துன்பப் பூச்சு. இம்மாத்திரை வெளிக் கசப்பு உள் இனிப்புள்ளது. ஒரு பெண்ணிடமிருந்து ஆணிற்கும் அதே ஆணிடமிருந்து அதே பெண்ணிற்கும் மாறி மாறித் தொற்றி வளர்வது. துயரில் முடியாத இன்பத்திற்குக் கட்டுக் குலையாத அடித்தளம் அமைப்பது. உள்ளத்தை மயங்க வைத்துத் தத்தளிக்கச் செய்யும் காமத்தை உடலைக் கலக்கி அயரச் செய்யும் நோய்க்கு ஒப்பிடுவர். இந்நோயின் வரலாற்றை மலரின் வரலாறாகவே திருவள்ளுவர்,

[18] "காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்" –என்று விரித்தார்.

இந்நோய் காண்பதற்கு ஒரு பக்குவம் பெற்றாகவேண்டும். அதுதான் பருவம் பெறும் பக்குவம். அப்பருவந்தான்

---

[17] திருக்குறள் : 1289 [18] திருக்குறள் : 1227

பெதும்பையிலிருந்து மங்கைப் பருவம் அடைதல். மங்கை யாக அமையும் பக்குவத்தைக் குறிக்கும் சொல், பூவால் அமைந்துள்ளது. அது "பூப்பு" என்பது. மங்கைப் பருவம் அடைந்த பெண்ணுக்கு மங்கல நீராட்டல் "பூப்பு நீராட்டு" எனப்படும்.

திங்கள் தோறும் அப்பக்குவம் புதுப்பிக்கப்படுவது "பூப்பு நாள்" எனப்படும். அக்காலம் தாய்மைக்குப் பக்குவம் பெறும் காலமாகும். மலர் பூத்துத் தாதுத் தூளைப் பரப்பிச் சூல் கொள்ளப் பக்குவம் பெறுவதை இஃதொக்கும். இலக்கண நூல்கள் இந்நாள் தாய்மைக்குத் தொடக்கம் என்பதைக் குறிக்கின்றன. இந்நாள் தொடங்கி மூன்றும் நாளில் நீராடியபின் பன்னிரண்டு நாள்கள் கருத்தரிக்கும் நாளாகையால் மகப்பேறு வேண்டுவோர் இப்பன்னிரு நாளிலும் மனைவியைப் பிரியார் என்பதை,

[19] "பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்
நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்" – என்றும்,

[20] "பூத்த காலைப் புனையிழை மனைவியை
நீராடியபின் ஈராறு நாளும்
கருவயிற் றுறூஉம் கால மாதலின்
பிரியப் பெறுஅன்" – என்றும் இலக்கண நூல்கள் குறிக்கின்றன. முன்னரே காதலன் பிரிந்திருப்பினும் தோழி வாயிலாக அவனுக்குச் செய்தியனுப்புவர் என்பதனையும்,

[21] "பூத்தமை சேடியிற் புரவலர்க் குணர்த்தலும்" – எனக் குறிக்கின்றது. அதன் அறிகுறியாகத் தோழிக்கு வெள்ளை ஆடையுடன் வெள்ளை மலரையும் சூட்டி அனுப்புவாள். இதற்கும் மலர் அறிவிப்புப் பொருளாகப் பயன்பட்டது.

---

19 தொல்காப்பியம்: பொருள்: 185
20 ந. அகப்பொருள்: 61. 21 நம்பி அகப்பொருள்: 94.

இந்தப் பூப்புப் பக்குவம் அடைதற்குக் கீழ் எல்லையாக 12 அகவை குறிக்கப்பட்டது. இப்பக்குவத்தில்தான் அவளுக்கு இவ்வுணர்வு அரும்புகின்றது. இதுபோது அவள் மலர்கின்றாள் எனலாம். ஆனால் மணம் பரவவில்லை. போது மலராகும் பக்குவம் அறிந்துதான் வண்டு அணுகி மலரில் இசைக்கும். இயற்கையில் மலர் விரியத் துவங்கும்போது இசையின் தழுவலால் மலராகி மணக்கும். இதுபோன்றே, பக்குவமடைந்த மங்கையைப் பருவமடைந்த விடலை அணுகித் தழுவுவான். அத்தழுவலால் அவள் மணம் பெறுவாள். இக் கருத்தை உள்ளடக்கியே மணத்தல் என்னும் சொல் எழுந்தது. மணத்தல் என்றால் கூடுதல் — தழுவுதல் என்று பொருள்.

அன்பும் இன்ப ஆர்வமும் எழுச்சி பெற்ற இருபாலார் தோளொடு தோள் தழுவ அவர்தம் தோள்கள் இன்பத் தினவில் நிற்பது பூரிப்பு எனப்படும். இதனைத் திருக்குறள்,

22 “தணந்தநாள் சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்” —என்றது.

‘கூடுதல்’ என்று பொருள்தரும். ‘மணத்தல்’ என்னும் சொல்லின் எதிர்ச்சொல் ‘தணத்தல்’ என்பது. இரண்டு சொற்களும் எதுகையால் ஒன்றினாலும், பொருள் மாறுபடுபவை. இது தமிழில் கையாளப்படும் ஒரு சொல்லமைப்பு முறை.

தழுவிய பின்னர் கன்னிப்பெண் மணந்தவள் ஆகின்றாள்; விடலையும் அவ்வாறே.

23 “மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது” —என்னும் குறள் பெண்ணை மணந்தவளாகவும்,

---

22 திருக்குறள்: 1239
23 திருக்குறள்: 1221.

[24] "மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்த திலேன்" —என்னும் குறள் ஆணை மணந்தவனாகவும் காட்டுகின்றன.

எனவே,
பூ, மலர்ந்து பூத்து வண்டின் தழுவலால் நறுமணம் வீசும்.
பூவையும், மங்கையாகிப் பூத்துக் காதலர் தழுவலால்
திருமணம் பெறுவாள்.

ஆம்,
மலரின் நறுமணமே
மங்கையின் திருமணம்.

மலரின் நறுமணமே மங்கையின் திருமணம் என்னும் போது எந்த மலரின் நறுமணம் என்னும் நினைப்பு ஊறுகின்றதன்றோ? அந்நினைப்பில் முல்லையின் நறுமணம் முகிழ்க்கின்றது. ஆம் முல்லைதான் இங்கும் மங்கையொடு வருகின்றது.

இடையில் முல்லை மலரைப்பற்றிய ஒரு விளக்கம் வேண்டியதாகின்றது. முல்லை அம்மலரினால் பெயர்பெற்ற முல்லை நிலத்தில் கருப்பெற்ற மலர். முல்லை காடும் – காடு சார்ந்த நிலமுமாகையால் முல்லையைக் காட்டு மலர் எனலாம். இது காட்டு மல்லிகை எனவும் வழங்கப் பெறும். ஆயினும் முல்லை வேறு; மல்லிகை வேறு. மல்லிகைக்கு இதழ்கள் முல்லையைவிட மிகுதி. இதழ்கள் அடுக்கியதாக அமைவது. அஃது அடுக்கு மல்லிகை எனவும் படும். முல்லையின் இதழ் மல்லிகையின் இதழைவிடக் குட்டையானது. உரையாசிரியர் கள் முல்லையைக் காட்டு மல்லிகை என்றே குறித்துள்ளனர். முல்லை காட்டு நிலத்தின் கரு ஆயினும் பிற நிலங்களிலும் பரவியது.

---

[24] திருக்குறள் : 1226.

முல்லையின் ஒட்டு வளர்ச்சிதான் மல்லிகை. எனவே முல்லை தான் மூலம். வாழ்வியலில் முல்லைதான் இன்றியமையா இடம் பெற்றது. சில மன்னர்களின் சின்னமாகவும் முல்லையே அமைந்தது. பிற நான்கு நிலத்து மலர்களிலும் முல்லையே மணத்திலும் மங்கலத்திலும் நிற்பது. எவ்வகையில் நோக்கினும் முல்லை ஒரு தனித்தன்மை கொண்ட சிறப்புடையது. கார்காலத்தில் சிறப்பாக மலர்வது. பொதுவாகப் பிற காலங்களிலும் மலர்வது.

"பூவிற்குத் தாமரை
பொன்னுக்குச் சாம்புநதம்" என்பர். தாமரை தன் நிறத்தாலும், பருமையாலும் இதழ்களின் நிறைவாலும் தலைமை கொண்டது. மணத்தாலும் மங்கலத்தாலும் முல்லைக்கு அடுத்த நிலையில்தான் தாமரை அமையும். தெய்வத் தன்மையில் திருமகளும் கலைமகளும் நான்முகனும் அமரும் தகுதி பெற்ற தாமரை பூக்களில் சிறப்பாகக் குறிக்கப்படுவது. வாழ்வியலில் மிகுதியும் இடம் பெற்றது முல்லையே.

திருமணம் பெறும் மணமகளும் மணமகனும் ஆயிரம் காலத்துப் பயிர் எனப்படுவர். அந்த ஆயிரங் காலத்துப் பயிரின் அணிகலன் முல்லை. திருமணம் முல்லையின் நறுமணத்தின் அடித்தளங் கொண்டது என்பதற்குத் தமிழர்தம் குடும்பங்களில் அமைந்த மரபு ஒன்றை அறிய வேண்டும்.

ஒரு பெண்—பெதும்பைப் பருவத்தவள் 10 ஆண்டு 10 திங்கள் நிறைந்தால் மங்கையாகப் பக்குவம் பெறுவாள் (இக்கணக்கு ஓரளவான காலக் கீழ் எல்லையே யாகும்) அவள் பக்குவம் பெற்ற அன்றே — அஃதாவது அவள் பூத்த அன்றே தனது இல்லத்து முற்றத்தில் ஒரு முல்லைக் கொடியை நடுவாள். தனது பூப்பைப் பெற்றோரிடம் வாய் திறந்து கூற நாணுவாளன்றோ? இந்நிலையில் தன் நிலையை அறிவிக்கும் அறிகுறியாகவும் இம்முல்லையை நடுதல் அமைந்தது. இக்குறிப்பால் பெற்றோர் நிலையை உணர்ந்து பூரிப்பர்.

நட்ட முல்லையை நாளும் நீரூற்றி வளர்ப்பாள். இரண்டு திங்கள் அம்முல்லைக்கொடி தழைத்து வளர்ந்து அரும்பும். அவளது உள்ளத்திலும் காதல் உணர்வு தழைத்து அரும்பும். அவ்வுணர்வின் எழுச்சியால் பலர் தமக்குரியவனை உள்ளத்தே வரித்துக்கொள்வர். அரும்பிய முல்லை மலர்ந்து கம்மென்று மணம் பரப்பும். மலர்களது மணத்தில் முல்லை மணம் காம உணர்வைக் கெல்லும் வல்லமை கொண்டது. அவள் வளர்த்த கொடியே அவளைக்கெல்லித் துன்புறுத்தி அவளுக்குக் கொடியதாகும். அஃதாவது உள்ளத்தில் உறைபவனின் பிரிவைத் தாங்க இயலாமல் துன்புறுவாள். இப்படித் துன்புற்ற ஒருத்தியைக் கண்ட மற்றொருத்தி பாடினள்:

25 "எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த
முற்றிழையாள் வாட முறுவலிக்கும் — முற்ற
முடியாப் பரவை முழங்குலகத் தெங்கும்
கொடியார்க்கும் உண்டோ குணம்" — இவ்வெண்பா

முல்லை வளர்த்தவளை அம்முல்லையே துன்புறுத்துவதால் கொடிய செயல் செய்ததாகக் குறித்துக் "கொடியார்" என இரண்டு பொருள்படும்படி உள்ளது. முல்லையை நயத்தோடு சாடுகின்றது.

இவ்வாறு பருவப் பெண் முல்லைக்கொடியை வளர்க்கும் மரபைக் கடவுளர் மேலும் ஏற்றினர். கொற்றவை இவ்வாறு கொடிநட்டு வளர்த்தாள் என்கிறது தக்கயாகப்பரணி. இதனைப் பின்னர் விளங்கக் காணலாம்.

இவ்வாறு மங்கை வளர்த்த கொடியின் மலரைக்கொண்டு காதலன் அவளது தலையில் களவின்போது சூட்டுவான். இது முல்லைச் சூட்டு எனப் பட்டது. களவில்லாமல் பெற்றோர் பார்த்து முடித்த திருமணமானால் அவள் வளர்த்த முல்லைப்

---

25 தண்டியலங்காரம்: சிலேடையின் முடித்தலுக்கு எடுத்துக்காட்டு.

பூவைக்கொண்டே அமைத்த முல்லைச் சூட்டை அணிவிக்கச் செய்வர். முல்லைச் சூட்டு என்பதே கற்பின் அறிகுறி. இது சூட்டப்பட்டால் பெண் தனது கன்னிமை கழிந்து கற்பு நெறிப்பட்ட இல்லறத்திற் புகுந்தாள் என்பதாகும்.

இதனால்தான் முல்லை என்றால் கற்பு என்னும் பொருள் எழுந்தது. கற்பு என்பதற்கு 'முல்லை' என்னும் சொல் ஆகியது.

'முல்லை கற்பின் சின்னம்' என்பதைப் பின்னர் விரிவாகக் காணலாம். முல்லைச் சூட்டை அணிவித்தவனே முல்லைத் தாரை அணிவிப்பான். சூட்டிய முல்லையும் மணக்கும். மங்கையும் மணப்பாள்.

நறுமணமும் திருமணமும் இணைந்து இழைந்துமிளிரும்.

"குறிப்பிற் குறிப்பு உணர்வார்."

திருமணம் இல்லறத்தின் புகுவாயில். அவ்வாயிலில் குமரனும் குமரியும் கைகோத்துப் புகுவர். தாமே புகுதலும், பெற்றோர் புகுத்தப் புகுதலும் நிகழும். பெரும்பான்மையாகப் பெற்றோர் புகுத்தப் புகுதல் நிகழும். மணமக்கள் தாமே புகுதல் நேருவது ஏன்?

பருவமுற்ற கன்னிப் பெண் தானே விடலைமேற் காதல் கொண்டு கணவனுக்கிக்கொள்ள விரும்புவாள். பெற்றோர் உற்றார் அறியாமல் இரவிலோ பகலிலோ தனியிடத்தில் இருவரும் கூடுவர்; குலாவுவர். இது களவு எனப்படும். இக்களவு அக்கம் பக்கத்தார்க்கு வெளிப்படுவதுமுண்டு. அவ்வாறு வெளிப்பட்டுப் பரவுவது "அலர்" எனப்படும். மலரின் அடுத்த பருவம் அலர் என்று கண்டோம். மலரின் இதழ்கள் அகல விரிந்து பலர் அறியுமாறு மணத்தை வெளிப் படுத்துவது அலர். இவ்வகைப் பொருத்தத்தால் களவின் மறை வெளிப்படுவதும் இப்பெயர் பெற்றது. இதன்கண் ணும் மலர் பொருந்தி நிற்கின்றது.

இக்களவு ஒளிவு மறைவாய் நிகழ்வதாகலின் அச்சம் தலைநீட்டிக்கொண்டே இருக்கும். எனவே, விரைந்து அக் களவை நீக்கித் திருமணம் செய்துகொண்டு அச்சமில்லா இன்பவாழ்வு வாழத் துடிப்பர்.

கன்னியின் களவு ஒழுக்கம் அவளுடன் அணுக்கமாகப் பழகும் அவளது தோழிக்கு முதலில் தெரியும். அவள் செவிலித் தாய்க்கு அறிவிப்பாள். அவள் பெற்ற தாய்க்கு அறிவிப்பாள். அவள் குறிப்பாகத் தந்தைக்கும் தமையனுருக்கும் அறிவிப்பாள். பெற்றோர் ஏற்றுக்கொள்ளின் முறைப்படி சான்றோர் முன்னிலையில் முல்லை சூட்டி வாழ்த்தை வழங்கி இல்லறத்திற் புகுத்துவர்.

சிலபோதில் பகைமையாலோ 'இந்தச் சிறு குட்டி நம்மை மீறி வெளியே சென்றுளோ' என்னும் சினத்தாலோ மறுத்துப் பொங்குவர்; சீறுவர். பெற்றோரது மாறுபாட்டை அறிந்த குமரன் குமரியை வேற்று ஊருக்கு இரவோடு இரவாக இட்டுச் செல்வான். அவளும் இசைந்து உடன் போவாள். இஃது "உடன் போக்கு" எனப்பட்டது. உடன் போனவர் சென்ற ஊரிலோ மீண்டுவந்து குமரன் இல்லத்திலோ திருமணம் புரிந்துகொள்வர். இது பெற்றோர் கொடுக்காமல் தாமே புரிந்துகொள்ளும் திருமணம். இது களவுத் திருமணம் எனப்படும்.

இதனை,

[26] "கொடுப்போ ரின்றியும் கரண முண்டே
புணர்ந்து உடன்போகிய காலை யான" – எனத் தொல்காப்பியம் குறிக்கின்றது. இது சிறுபான்மையாக நிகழ்வது என்பதைக் "கொடுப்போர் இன்றியும்" என்பதிலுள்ள 'உம்' குறிக்கின்றது.

---

26 தொல் : பொருள் : 141

பெற்ரோர், மகளின் கருத்தறிந்து இசைந்தும், தாமே மணமகனை அமைத்தும் திருமணத்தைச் செய்துவைப்பதே பெரும்பான்மையாக நிகழ்ந்தது. இத்திருமண முறையில் கரணம் எனப்படும் சடங்கு ஏற்படுத்தப்பட்டது. சொல்லைக் காப்பாற்ருமல் பொய்த்தும் நேர்மையற்று நடந்துகொண்டும் கீழறுப்பு வேலை செய்வோர் தோன்றியதால் அவரைக் கட்டுப்படுத்த இக்கரணத்தை ஏற்படுத்தினர். இக்கரணம் காலப்போக்கில் மரபாகிப் பலரும் கடைப்பிடிக்கும் கடைப்பிடியாயிற்று. கரணம் பிறந்த காரணத்தை,

[27] "பொய்யும் வழுவும் மலிந்த பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப" – என்று தொல்காப்பியம் வாழ்வியல் நெறியில் பொய்யும் வழுவும் பிறந்து மலிந்ததாலேயே கரணம் உண்டாயிற்று என்று மட்டும் கூறவில்லை நெறிப்பாடில்லாது மாறிய கீழவர்க்காகவே அஃது ஏற்படுத்தப்பட்டது என்பதையும் காட்டி நிற்கின்றது. இந்நூற்பாவில் "யாத்தனர்" என்னும் சொல் 'கட்டுப்படுத்த உருவாக்கினர்' என்னும் பொருளைத் தந்துநிற்பதைக் காணலாம். இக்கரணம் பொதுவில் யாவர்க்கும் ஆகி, மரபாகியது. இம்மரபு வேற்றினத்தாரும் வேற்றுமொழியும் ஆட்கொள்ளும் அளவில் பெருகி இடம் பிடித்து மடம் பிடுங்கிய கதையாயிற்று.

இவ்வாறு பெற்ரோர் கொடுப்போராக மணமகன் கொள்வோனுக அமைந்து கரணத்துடன் நிகழும் மணம் [27] 'கற்பு மணம்' எனப்பட்டது.

இதுபோன்று யாக்கப்பட்ட — புதிதாகக் கற்பிக்கப்பட்ட கரணங்கள் முந்தைய நல்ல மரபுகள் பலவற்றை

---

[27] தொல் : பொருள் : 143

[27] கற்பெனப் படுவது கரணமொடு புணரக் கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக் கொடைக்குரி மரபினேர் கொடுப்பக் கொள்வதுவே. – தொல் : பொருள் : 140

மறைத்தன; மாற்றின. மறைந்த அல்லது ஆங்காங்கே அள்ளித் தெளித்தாற்போல பல பண்புடைய குடும்பங்களில் தென்படும் மரபுகள் நினைந்து மகிழத் தக்கன. அவற்றுள் ஒன்றிரண்டைக் காணலாம்:

பெண் பக்குவமடைந்ததும் மணமகன்பற்றிய பேச்சு எழும். உறவினராயினும் புறவினராயினும் மாப்பிள்ளை பார்க்கப் போதலும் பெண் பார்க்கப் போதலும் நிகழும். பெண்பார்க்கச் செல்வதில் சில மரபுகள் தமிழரது குறிப்பில் உணர்த்தும் – குறிப்பில் உணர்ந்துகொள்ளும் நாகரீகத்தைப் புலப்படுத்துகின்றன.

பெண் பார்க்கச் சில ஆடவரும் மூன்று மகளிரும் செல்வர். அவருள் மகளிர் மூவரே இன்றியமையாதவர். செல்லும் மகளிர் மூவரில் ஒருத்தி இளம்பெண்ணாக இருப்பாள். இவள் மணமகனது தங்கையாகவோ அந்த அளவு நெருக்கமுள்ளவளாகவோ அமைவாள். அடுத்து இடைநிலை அகவையுள்ள ஒருத்தி இடம் பெறுவாள். இவள் மணமகனது குடும்பத்தில் பொறுப்பு வாய்ந்தவளாவாள். மூன்றாமவள் முதியவளாவாள். இவள் உறவினளாகவோ புறவினளாகவோ அமையலாம். இவள் சென்று பழக்கப்பட்டவளாகப் பல குடும்பங்களுக்கும் செல்வதுண்டு.

மூவர் செல்வது ஏன்? அதனிலும் இவ்வாறு மூன்று வகையாகச் செல்வது ஏன்? இவ்வமைப்பில் ஒரு கருத்து உண்டு.

இளம் பெண் மணமகளது அழகு, உடலமைப்பு, கூந்தல், நிறம், ஒப்பனை, தோற்றம் முதலியவற்றைக் கூர்ந்து நோக்குவதற்காகச் செல்லுபவள். மீண்டு வந்ததும் மணமகனுக்கு அவற்றை அறிவிப்பவள்.

இடைநிலை அகவையாள் அக்குடும்பச் செல்வநிலை, உறவுப் பாங்கு, குடும்ப அமைப்பு முதலியவற்றை – உசாவி

அறியாமல் – குறிப்பால் உணர்ந்து வருவாள். அத்துடன் கொள்வன, கொடுப்பன, பரிசம், சீர் முதலியவற்றை உணர்ந்து வருவாள்.

மூன்றாவது முதியவள் மணப்பெண்ணின் சமையல் திறத்தை அறிவதற்காகவே செல்பவள், அல்லது அழைத்துச் செல்லப்படுபவள். மணமகளது குணநலன்களுடன் அவளது சமையல் திறனை அறிவது இன்றியமையாததாகக் கருதப் பட்டது. சங்க இலக்கியங்கள் இச்சமையற் பாங்கை வெவ்வேறு இடங்களில் வாய்ப்பை ஏற்படுத்திக்கொண்டு பேசுகின்றன. தற்காலத்துப் பாவேந்தர் பாரதிதாசனாரும்,

"வீரர்ப்பு வாழ்வு தன்னை
மேற்கொண்டார் என்றால், அன்னார்
சோறாக்கிக் கறிகள் ஆக்கிச்
சுவையாக்கக் கற்றதால் ஆம்"
– என்று சமையற்பாங்கின் பயனைப் பாடினார்.

பெண்பார்க்க வந்திருப்போருக்குரிய விருந்தை மணமகளே சமைக்க வேண்டும் என்பது மரபு. அவளது திறத்தை உணவுச் சுவையால் மட்டுமன்றி, சமைக்கும் பாங்காலும் அறிய முதியவள் முந்துவாள். அவ்வீட்டார் விருந்துக்குத் தொகுத்துவைத்துள்ள கறிகாய்களை இம் முதியவளே அரிந்து வைப்பாள். இம்முதியவள் சமையல் திறத்தில் தேர்ந்தவளாக அமைவாள். இவள் அரிந்து வைக்கும் காய்கறிகளின் பருமன், அளவு, பாங்கு முதலிய வற்றை மணமகள் குறிப்பால் உணரவேண்டும். அக் குறிப்பால் இது கூட்டுக்கு உரியது; இது பொரியலுக்கு உரியது; இது வருவல் செய்யவேண்டியது; இது குழம்புக்கு ஆவது' –என வகை தெரிந்து சமைக்க வேண்டும். முதியவள் வாய் திறந்து கூறமாட்டாள்; மணமகளும் உசாவி அறியக் கூடாது. யாவும் குறிப்பால் நிகழும்.

மணமகளைக் கண்ட பின்னர் உற்றார் அளவளாவுவர். மணமகன் வீட்டார் தங்களுக்குள் கலந்துரையாடி முடிவுக்கு வருவர். விருந்தின் முடிவுதான் திருமண இசைவு, இசைவின்மை பற்றிய கருத்தைத் தெரிவிக்கும் நேரமாகும். பெண் வீட்டாரும் அந்நேரத்தையே எதிர்பார்த்திருப்பர். அம்முடிவை வாய்திறந்து சொல்லமாட்டார். ஏனெனில் இசைவை அறிவிப்பது மகிழ்ச்சிக்குரியதாகும். இசைவின்மையை அறிவிப்பது கண்ணோட்டமென்னும் நாகரிகம் ஆகாதன்றோ? அதனால், குறிப்பாகத் தெரிவிக்க எண்ணினர். அதற்கு ஒரு முறை கைக்கொள்ளப்பட்டது.

விருந்து உண்டு முடிந்து இலையைவிட்டு எழும் முன்னர் உண்ட இலையை மூடும் பாங்கையே இதற்குப் பயன் படுத்தினர்.

உண்ட இலையைத் தம்பக்கமாக மூடினால்
மீண்டும் வருவதற்கில்லை — அஃதாவது பெண் பிடிக்க வில்லை, இசைவில்லை என்பது கருத்தாகும்.
உண்ட இலையை முன் பக்கமாக மூடினால்,
மீண்டும் வருவோம்; அஃதாவது பெண் பிடித்திருக்கிறது; திருமணத்திற்கு இசைவு' என்பது கருத்தாகும்.
உண்ட இலையை மூடாமல் திறந்தபடியே விட்டால்,
'வீட்டாருடன் கலந்துரையாடிப் பின்னர் தெரிவிப்போம்; அஃதாவது இப்போதைக்கு இசைவும் இல்லை; இசைவின்மை யும் இல்லை' என்பது கருத்தாகும்.

இவ்வாறு குறிப்பாக அறிவிப்பதை மணமகள் வீட்டாரும் குறிப்பால் உணர்ந்து மகிழ்வர்.

[28] "குறிப்பில் குறிப்புணர் வாரை, உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்" —எனப் பொதுவிற் கூறப்பட்டதாயினும் 'யாது கொடுத்தும் பெண் கொள்ளுதற் கும்' இது பொருந்துகின்றது.

---

28 திருக்குறள்: 703

**சிலம்பு ஒரு சின்னம்.**

*மலர் அழகை வழங்கும்; அழகை ஊட்டும். தன் தோற்றத்தால் அழகை வழங்கும்; தன்னை அணிவதால் அழகை ஊட்டும். மலர் மாந்தர் பெற்ற முதல் அணிகலன். பிற பொன், மணி முதலிய அணிகலன்கள் யாவும் மலர் அணியை ஒட்டி உருவாயின.*

*மலர், மணமும் அழகும் கருதிச் சூடப்பட்டதாயினும் அது மங்கலக் கருத்தும் கொண்டது. மலர் மங்கலக் கருத்து கொண்டது மட்டுமன்று; மங்கலம் அல்லாத துன்பக் காலத்தில் சூடப்பட்டதாகும்:*

*ஒல்லையூர் என்பது ஓர் ஊர். அங்கு வாழ்ந்த கொடைப் பெருமகனும் வீரனுமாகிய பெருஞ்சாத்தன் என்பான் போர்க்களத்தில் மாய்ந்தான். அத்துக்கத்தால் என்றும் முல்லையைச் சூடும் பழக்கமுள்ளவர் யாவரும் அன்று சூட வில்லையாம். குடவாயில் கீரத்தனார் என்னும் புலவர் அன்று பூத்த முல்லையைப் பார்த்து இரங்கி,*

[29] *"முல்லைச்செடியே, வீரன் சாத்தன் மாய்ந்தான் இன்று குமரன், குமரி உன்னை அணியார்; பாணன், பாடினி சூடார்; ஏன் வீணகப் பூத்துள்ளாய்" என்று பாடினார்.*

*மலர் வழி எழுந்த பிற அணிகலன்களில் மங்கலம் கருதியவை இன்றியமையாத அணிகலன்களாக அமைந்தன. அழகு கருதியவை அடுத்த நிலை கொண்டவையாயின.*

---

29 "இளையோர் சூடார், வளையோர் கொய்யார்,
நல்லியல் மருப்பின் மெல்ல வாங்கிப்
பாணன் சூடான், பாடினி அணியாள்
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே"

*புறநானூறு: 24*

மாந்தரில் இரு பாலாரும் பலவகை அணிகலன்களை அணிகின்றனர். அவற்றுள் சில சில ஒவ்வொரு தகுதி கருதிய அணிகலன்கள் ஆயின.

தலைமுடி அரச பதவிக்குரியது.
மார்பில் அணிவது மங்கல அணி.
குழந்தைக்கு மார்பிலோ இடுப்பிலோ அணிவது காப்பு அணி.
ஆடவரது ஆற்றலின் அறிகுறி வாகு வளையம் என்னும் தோள் வளை.
ஆடவரது வீரத்தின் அறிகுறி கழல்; இஃதே கொடையின் அறிகுறியும் ஆகும்.

நிறைந்த அணிகலன்கள் மகளிர்க்காகவே தோன்றின; எழுந்தன; வளர்ந்தன; பெருகின. அவை அழகு ஒன்று மட்டும் கருதி அணியப்படுவதில்லை. வெவ்வேறு நலங்கருதியும், குறியீடு கருதியும் நோக்கம் கருதியும் அணியப்பட்டன

மகளிர்க்குத் தலையணி அழகுப்பொருள்.
காதணியும் மூக்கணியும் ஓரளவு மங்கலப் பொருள்.
கழுத்தணி பெருமளவில் மங்கலப் பொருள்.
கைவளை மங்கலக் காப்பு.
இடையணி உடைக்காப்பு.
காலணிகள் அழகிற்கும், ஓசைக்கும், காப்பிற்கும் பருவத்திற்கும் ஆனவை, அவை: தண்டை, சதங்கை, மணிக்கெச்சை, கால்வடம், காற்சரி, மெட்டி, பரியகம், பரிபுரம், பாடகம், நூபுரம், சிலம்பு எனப் பல.

இவற்றுள் சிலம்பு ஒரு தனிச்சிறப்புடையது; தனி மதிப்புடையது; இரண்டினும் மேலாகத் தனிநோக்குக் கொண்டது.

சிலம்பு என்பது, வெள்ளி, பொன்னால் உட்கூடாகச் செய்யப்படுவது. சிறிய ஒலியெழுப்புவதற்காக உள்ளே பரல் பெய்யப்படுவது. உள் பரலாகக் கல், வெள்ளி மணி,

பொன்மணி, முத்து, வைரம், மாணிக்கம் முதலியன பெய்யப்படும். பாண்டிமாதேவியின் சிலம்பு முத்துப் பரல் கொண்டது என்பதையும், கண்ணகியாரது சிலம்பு மாணிக்கப் பரல் கொண்டது என்பதையும் சிலப்பதிகாரத்தால் அறிவோம்.

இவ்வணி புறக்காலில் படிந்து கிடக்கும் பாங்கில் இடை குவிந்த வளைவாகச் செய்யப்படும். விரித்து இணைக்கும் பொருந்துவாய் கொண்டதாக உருவாக்கப்படும். பத்தி பத்தியான குழிகளில் மணிகள் பதிக்கப்பெற்றிருக்கும். வைரமும் பதிக்கப்படுவதுண்டு. சித்திர வேலைப்பாடுகள் கொண்டது. அவரவரது செல்வ நிலைக்கேற்பச் செய்யப்படும். செல்வநிலையில்லாத எளியோரும் தோலாலும், புல்லாலும், நாராலும் சிலம்பு உருவில் செய்து அணிந்துகொள்வர். சிலம்பை எவ்வகையிலேனும் தம் பெண்ணுக்கு அணிவிக்க வேண்டுமென்னும் மரபுடையவராக இருந்தனர்.

**சிலம்பு இளம்பெண்ணுக்குரிய அணிகலன்.**

[30] "சிறுமுது குறைவி சிலம்பார் சீறடி" என்கின்றது அகநானூறு. பெதும்பைப் பருவத்தில் அணியப்பட்டு மங்கைப் பருவத்தை மதிப்பிடுவது. இது குமரிப் பருவத்துக் கன்னியின் சின்னம்.

இறையியல் கோட்பாட்டை விளக்கும் திருமூலர்,

[31] "........ குமரி குலக்கன்னி
பாடகச் சீறடி பைம்பொற் சிலம்படி" – எனப் பாடினார். சிலம்பு கன்னிக்குரிய அணிகலனாக இருந்த அடிப்பட்ட பழக்கத்தை அறிந்த திருமூலர் அக்குறிப்பை வாய்ப்பாக்கிக் கையாண்டுள்ளார்.

---

[30] அகநானூறு: 17: 9 [31] திருமந்திரம்: வயிரவி மந்திரம்: 72

மகளிர் பருவங்களில் பெதும்பைப் பருவம் கன்னித் தன்மைக்கு அடித்தளம் கொள்ளும் பருவம். எனவே இப்பருவம் கன்னித் தன்மை கொண்டதாகும். சிலம்பு கன்னித் தன்மையின் சின்னமாகவே அணிவிக்கப்பட்டது. கன்னிமை நிறைவேறிக் கழிந்ததும் இச்சின்னமும் அகற்றப்பட்டது. ஆம், சிலம்பு திருமணத்திற்கு முன்னர் கழற்றப்பட்டது. கழற்றப்படினும் இது கன்னிமையின் சின்னமாகப் போற்றிக் காக்கப்பட்டது. பழுதுபடாமல் பேணப்பட்டது. அவ்வப் போது கவனிக்கப்பட்டு மெருகேற்றிச் செவ்வைப்படுத்தப் பட்டது. கழிந்த தமது கன்னிப் பருவத்தின் நினைவூற்றம் எழும்போது அதனை அணிந்து மகிழ்வர்.

இவற்றிற்கெல்லாம் இலக்கியங்களில் சான்றுகள் உள்ளன.

கண்ணகியார் தம் அணிகலன்கள் யாவற்றையும் இழந்த போதும் சிலம்பை மட்டும் இழக்காமல் காத்ததன் காரணம், அது கன்னிமையின் சின்னமாகப் போற்றப்பட்டமையே. அதனையும் அவள் விற்க முன்வந்தது அவளது அவலத்தின் அறிகுறியாகும். பாண்டிமாதேவியின் சிலம்பு பொற் கொல்லன்பால் செம்மைப்படுத்தச் சென்றதும், அவன் அதனை மறைத்ததும், அதனால் அரசி கவன்றதும் மேலே காட்டிய கருத்துக்களை வலியுறுத்துகின்றன.

பெதும்பைப் பருவத்தில் அணியப்படும் சிலம்பு, இடை யில் அறவே கழற்றி விடப்படுவதில்லை. ஆனால், சிலபோது வாய்ப்பிற்காகக் கழற்றப்படுவதுண்டு.

காதல் தலைவி தான் விரும்பிய தலைவனுக்கு மணம் செய் விக்கப் பெற்றோர் இசையாதபோது அவள் அவனோடு உடன் போக்கை மேற் கொள்ளுவாள் அன்றோ? இரவில் விடியற் போதில், வீட்டார் அறியாதபடி அவள் புறப்படுவாள். சிலம்புடன் காலடியை எடுத்து நடப்பின் சிலம்பின் 'கலீர் கலீர்' ஒலியால் உறங்குவோர் எழுவர் என்று கருதிச்

சிலம்பைக் கழற்றி வைத்தும் செல்லுவாள்; எடுத்தும் செல்லுவாள். வைத்துச் சென்றால் மீண்டுவந்து தன் இல்லத்திலேயே திருமணம் புரிந்துகொள்வாள் என்பது கருத்தாகும்.

[32] "வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்
அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்
வரிபுனை பந்தொடு வைகிய செல்வோள்" - என்னும்
நற்றிணைப் பாடல் இக்குறிப்பைத் தருகின்றது.

உடன்போக்கில் நீண்ட தொலைவு நடக்க நேருமாதலால் கழற்றிச் செல்வாள். அதுபோதும் கழற்ற விரும்பாதவள் அணிந்தே செல்வாள். திருமணத்திற்கு முன்னர் இவ்வாறு கழற்றிச் செல்வது அரிதாகவே நிகழும். இச்செயல் கூடாததாகவும் கருதப்பட்டது.

[33] குமரனுடன் ஓடிப்போன குமரியின் தாய் காலையில் அவள் கழற்றி வைத்துப் போன சிலம்பைப் பார்த்தாள். மிக வருந்தினாள். 'சிறுபெண்ணாகிய இவள், தான் விரும்பிய துணைவன் தந்த ஊக்கத்தால் தான் அறியாத ஊருக்குச் செல்ல இசைந்தாளே. வழி, காட்டு வழியாயிற்றே; வெய்யில் கொளுத்துமே; அதிகம் நடந்தறியாதவள் தொலைவில் நடக்க நேருமே என்றெல்லாம் நினைத்துப் பார்க்காமல் புறப்பட்டது கொடுமையானது. கழற்றக்கூடாத சிலம்பைக் கழற்றிப் போனது அதனினும் கொடிது' - எனக் கவன்றாள்.

மேலும் தலைவன் தலைவி கூடிக் குலவும்போது காலில் கிடக்கும் இச்சிலம்பு ஓசையிட்டும் இடையூறுகும். சில நேரம்

32 நற்றிணை : 12

33 "தானமர் துணைவன் ஊக்க ஊங்கி
உள்ளாது கழிந்த முள்ளெயிற்றுத் துவர்வாய்
சிறுவன் கண்ணி சிலம்பு கழீஇ
அறியாத் தேயத்தள் ஆகுதல் கொடிதே"
- அகநானூறு 385

பழுதுபட்டும் போகும். பழுது பட்டதைத் தாய் அறிந்தால் தன் களவுக் குட்டு வெளிப்படுமே எனக் கருதி அந்நேரத்திலும் கழற்றப் பெறும்.

[34] ஒருநாள் மாலை. கடற்கரையில் புன்னை மரச் செறிவுக்கிடையே அவள் அவனுடன் நண்டு பிடித்து விளையாடினாள். கூடிக் குலவி ஓடி ஆடினாள். ஓடியபோது கால் சிலம்பு உடைந்தது. 'ஐயோ, தாய் அறிந்தால் தான் களவாக அவனுடன் ஆடியதை அறிவாளே' என அஞ்சினாள். தன் தோழியிடம் இதனைக் கூறினாள். தோழி தலைவனிடம் போனாள். 'உன்னுடன் ஆடியதால் உடைந்த சிலம்பு அவளைக் காட்டிக்கொடுத்துவிடும். எனவே, அதனைப் பொருந்தவைத்துப் பொருத்துவதற்கு உரிய மண்ணை நீதான் கொணரவேண்டும்; என்று வேண்டினாள்.

இப்படியொரு விளக்கத்தை நற்றிணைப் பாடல் ஒன்று கூறுகின்றது.

இவ்வாறு இடையிடையே சில காரணங்களால் சிலம்பைக் கழற்ற நேரும். ஆனால், திருமணத்திற்கு முன்னர் கன்னித்தன்மை கழிவதால் அதன் அறிகுறியாக ஒரு நிகழ்ச்சியே அமையும். அந்நிகழ்ச்சியும் ஒரு மணம் எனவே கூறப்படும். அது சிலம்பைக் கழற்றி வைப்பதாகும். இஃது ஒரு மரபு நிகழ்ச்சியாகவே கொள்ளப்பட்டது. இதற்கென மணமகள் ஒரு நோன்பை மேற்கொள்வாள். இது "சிலம்பு கழி நோன்பு" எனப்படும்.

[35] "தலைவன் மீண்டு தலைவியைத் தன்மனைக்கண் கொண்டு வந்துழி, அவன் தாய் "சிலம்பு கழி நோன்பைச்" செய்கின்றான் எனக்கேட்ட (மணமகளின்) நற்றாய் ஆண்டு நின்றும் வந்தார்க்குக் கூறியது" — என நச்சினார்க்கினியர் என்னும் உரையாசிரியர் தொல்காப்பியத்தில் இந் நோன்பைக் குறித்துள்ளார்.

---

34 நற்றிணை: 363.
35 தொல்: அகத்திணையியல்: 36 உரை.

36 "தலைமகள் தன்னகத்தே வதுவைக் கலியாணம் (திருமணம்) செய்வான் எடுத்துக் கொண்டான் என்பது கேட்ட நற்றாய் "ஒழிந்த கலியாணம்" (சிலம்புகழி நோன்பு நிகழ்ச்சி) செய்யினும் நம் அகத்தே வதுவைக் கலியாணம் செய்ய நேருங்கொல்லோ, காளையைப் பயந்தாள்" — என்னும் இறையனார் களவியல் உரையும் "ஒழிந்த கலியாணம்" என்று இச்சிலம்பு கழி நோன்பை ஒரு மண நிகழ்ச்சியாகவே குறிக்கின்றது.

37 "மணம் புரிவதற்கு முன் மணமகளது காலில் பெற்றோர்கள் அணிந்திருந்த சிலம்பை நீக்குதற்கு ஒரு சடங்கு செய்யப்படும். அது "சிலம்பு கழி நோன்பு" எனப்படும்" — என்று தமிழ்த் தாத்தா உ. வே. சா. அவர்களும் விளக்கியுள்ளார்கள்.

எனவே,
சிலம்பு, கன்னிப்பெண்ணிற்கு இன்றியமையாத அணிகலன்

சிலம்பணிவது ஒரு மரபு.
அது, கன்னி கழியுமுன் கழற்றப் பெறும்.
அதற்கொரு மணநிகழ்ச்சியே உண்டு.
அது "சிலம்பு கழி நோன்பு" எனப்படும்.
இவற்றால்
சிலம்பு கன்னிப்பருவத்தின் சின்னம்.

திருமணம் பற்றிய மரபுகள் யாவும் பெற்றோர் இசைவுடன் நிகழ்த்தப்பெறும் திருமண நிகழ்ச்சியில்தான் முறையாக அமையும். களவுத் திருமணத்தின்போது இம்முறை அமையுமாயினும் முறையில் ஒழுங்கு இருக்காது.

---

36 இறையனார் களவியல்: 23 உரை.
37 ஐங்குறுநூறு: 399 குறிப்புரை

சிலம்பு கழி நோன்பு மணமகளது தாய் வீட்டில்தான் நிகழ வேண்டும். களவு மணத்தில், அழைத்துச் சென்றவன் சென்ற இடத்திலும் இதனை நிகழ்த்திவிடுவான். மீண்டு தனது வீட்டிலும் நிகழ்த்துவான். இது முறைக்குச் செய்யப் படினும் ஒழுங்குடன் நிகழாததாகும். மேலும் இவ்விழா ஒரு மணவிழாவாகச் சீருடனும் சிறப்புடனும் கொண்டாடப் படவேண்டும். விழாக் கோலம் பூண்ட இல்லத்தில்,விருந் துடன் நிகழ வேண்டும்.

இதற்கு மாருக நிகழ்ந்துவிட்டதைக் கேள்வியுற்ற மணமகளின் தாய் ஒருத்தி நொந்து போனுள்:

[38] "எனது மகள் போன இடத்தில் சிலம்பு கழி நோன்பைச் செய்தாளே! வறுமையுள்ள பெண்கள் கூடி யிருக்கச் செய்தாளே! விழாவின்றிச் செய்துகொண்டாளே! வைக்கோல் வேய்ந்த குடிசையில் நிகழ்த்தினுளே! ஓர் ஆவையே கொண்ட எளிய குடும்பத்தில் செய்தாளே! ஒரு தூணை நாட்டப்பட்ட முற்றத்தில் செய்துகொண்டாளே! எந்தச் சீரும் வழங்கப் பெருமல் போயிற்றே! விருந்தில்லா வெற்று மனையில் நிகழ்ந்ததே! இவ்வாறு செய்துகொள்ளவும் இசைந்தாளே! நான் நோகின்றேனே!" — என நொந்து பேச வைத்தார் நக்கீரர்.

அழைத்துப் போனவன் திரும்பவரின் சிலம்பு கழி நோன்பையும், வதுவை மணம் என்னும் திருமணத்தையும் தனது இல்லத்திலேதான் நிகழ்த்திக்கொள்ள விரும்புவான். புகுந்த வீட்டில் நிகழ்வதை மணமகளைப் பெற்ற தாய் பொறுத்துக்கொள்ள மாட்டாள்.

---

[38] "சீரும் சிறப்பும் இன்றிச் சீறூர்
நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
ஓர் ஆ யாத்த ஒரு தூண் முன்றில்
ஏதில் வறுமனைச் சிலம்பு உடன் கழீஇ
மேயினள் கொல்? "என நோவல் யானே"
— அகநானூறு 369

ஒருதாய் பொறுக்காமல் கெஞ்சுகிருள்:

[39] "எனது மருமகனும் காளை வெற்றிவேல் வீரன் என்பதில் எனக்கு மகிழ்ச்சிதான். ஆனால், வஞ்சமாக எனது மகளை அழைத்துப் போன வகையில் பொல்லாத பொய்யன். போகட்டும். அவனை ஈன்ற தாய் தனது இல்லத்திலேயே மண நிகழ்ச்சிகள் யாவற்றையும் நிகழ்த்திவிடுவாள் போல் தெரிகிறதே. எனக்காக யாரேனும் அவளிடம் போய்,"உனது இல்லத்தில் சிலம்பு கழி நோன்பைப் பெருவிழாவாகச் செய்து விட்டாய். என்றால் அது தாங்க முடியாததே. ஆனால், திருமணத்தை யாவது எனது இல்லத்தில் நிகழ்த்தலாமே" – என்று சொன்னால் என்ன?" —எனக் குறைபட்டுக் கொள்கின்றாள். இந்நிலையில் இவளை அறிமுகம் செய்கின்றது ஐங்குறுநூறு. கேட்கும் நமக்கும் இரக்கம் பிறக்கின்றது.

இந்த விழா மணமகளுக்கு ஒரு நோன்பு விழா. சிலம்பு கழற்றப்படுவது அவளுக்கு நிறைவான மகிழ்ச்சிக்குரியதன்று. வரவிருக்கும் இன்பத்தை எண்ணி இதனை ஏற்பாள். தனது கன்னித் தன்மை — அதற்கிருந்த தனி உரிமை அழிகின்றதே என்று கவல்வாள். இதற்கென அமைந்த ஒழுங்கு உண்டு. காற்சிலம்பை யார் கழற்றுவது? அவளது கன்னிமையை அழிப்பவன் எவன்? மணமகன்தானே! அவன்தான் இதனை யும் செய்ய வேண்டும்! ஆம், சிலம்பைக் கழற்றும் நிகழ்ச்சியை மணமகன்தான் நிகழ்த்துவான். திருமண மங்கலத்திற்கு முன்னர் வளமான விழாவில் மங்கலப் பெண்கள் கூடியிருக்க அவன் அவளை நிற்கவைத்து அவளது காலைப் பிடித்துச் சிலம்பின் கூடுவாய்த் திருகைக் கழற்றிச் சிலம்பைக்

---

[39] "நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்
எம்மனை வதுவை நன்மணம் கழிகெனச்
சொல்லின் எவனோ? வென்வேல்
மைபெற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே"

— ஐங்குறுநூறு: 399

கழற்றுவான். கழற்றிய சிலம்பை அவள் கையில் வழங்கு வான்.

இவ்வாறு சிலம்பைக் கழற்றுபவன் மணமகன் என்பதை ஒரு நீர்க்குழாயடிச் சண்டை போன்ற ஒரு பூசல் வெளிப் படுத்துகின்றது :

மதுரையில் வையையாறு வெள்ளம் கரைபுரண்டு ஓடுகின்றது. மகளிரும் மைந்தரும் நீராட வருகின்றனர். தலைவியும் அவள் தோழியர் கூட்டத்துடன் வருகின்றாள். நீராடப் பரத்தையர் பலரும் வந்துள்ளனர். அவனுக்கு வேண்டிய ஒரு பரத்தையைத் தோழி கண்டுவிட்டாள். குத்தலாகப் பேச்சு தொடங்கி ஏச்சாகியது. "நீ விலைக் கணிகை; பொதுமகள்; வாய்த்தொட்டி; புனலாட்டி; காமக் கலப்பை. பழைய பானை; திருடி" என்றெல்லாம் பரத்தையை ஏசினாள். அவளும் தோழியையும் குறிப்பாகத் தலைவியை யும் சாடினாள்.

உன் அன்பன் எனக்கும் அன்பன்தான். ஆனால் நான் திருடி அல்லள்; அவன்தான் திருடன். அவன் உனது தலைவிக்குப் பரிசமாக மாலை போடப் பொன் வழங்கியது போன்று உனக்கும் தருவானடி! மண நிகழ்ச்சியின்போது சிலம்பு கழி நோன்பில் உன் தலைவியது காலைத் தொட்டுச் சிலம்பைக் கழற்றினானே அதுபோல உனது சிலம்பைக் கழற்றுவாண்டி" — என்று ஒரு போடு போட்டாள்.

40 "மாலை அணிய விலைதந்தான், மாதர்நின்
கால சிலம்பும் கழற்றுவான்" என்றாள். பரிபாடல் காந்தாரப் பண்ணில் இசைக்கும் இப்பாடல் சிலம்பு கழற்று பவனைச் சுட்டிக் காட்டுகின்றது.

இங்கு ஒன்றை நினைவிற் கொள்ள வேண்டும். இடைக் காலத்தில் பல தமிழ் மரபுகள் மாறித் தடம் புரண்டன

---

40 பரிபாடல் : 20.

திருமணம் முடிந்து மணமகன் மணமகள் அம்மி மிதித்து அருந்ததி பார்ப்பது என்று ஒரு புதிய பழக்கம் காரண மாக உள்ளதன்றோ? அதில் மணமகன் மணமகளது காலைத் தொட்டுத் தூக்கி அம்மிமேல் வைப்பான். இது சிலம்பு கழி நோன்பின் சிலம்பு கழற்றும் நிகழ்ச்சி தடம் புரண்டு போனதன் அடையாளம். அதில் கழற்றுவான்; இதில் கால் விரலில் மெட்டியை அணிவிப்பான். இவ்வாறும் மாறியது.

இவ்வாறு சிறு நிகழ்ச்சியாக இதுபோது மாறியுள்ள அக்காலச் சிலம்பு கழி நோன்பு அந்நாளில் காணத்தக்க ஒரு அருங்காட்சியாக இருந்தது. தனது மகளுடைய காலைத் தனக்கு மருமகனாகும் காளை தொடுவதும் சிலம்பைக் கழற்று வதும் பெற்ற தாய்க்கு ஒரு கண்கொள்ளாக் காட்சி; மனங் கொள்ளா மகிழ்ச்சி. அக்காட்சி அவளுக்கொரு செல்வமாம். இச்செல்வத்தை இழந்த ஒரு தாய் புலம்புகின்றாள்:

[41] "எனது மகளது சிறிய அடிகள் காட்டு வழியே நடந்த துன்பத்தைப் பொறுத்தேன். ஆனால், சிலம்பு கழி நோன்பை அவன் இல்லத்தில் நிகழ்த்தினானே அதை எவ்வாறு பொறுப்பேன்? எனது மகளது காலைத் தொட்டு நின்று அவன் சிலம்பைக் கழற்றும் காட்சி ஒரு செல்வக் காட்சி. அக்காட்சியை பிறர் எல்லாரும் கண்டு சுவைக்க நான் கண்டு சுவைக்க இயலாமல் போயிற்றே" — என்று புலம்பி வருந்தினாள்.

அச்செல்வக் காட்சியை இழந்தவள் அந்தத் தாய் மட்டும் அல்லள்.
அம்மரபை மறந்த நாமும் இழந்தவர்களே.
இழந்த நாமும் வருந்த வேண்டியவர்களே.

---

[41] "அதருழந்து அசையின கொல்லோ; ததரல்வாய்
சிலம்பு கழீஇய செல்வம்
பிறர்உண் ணக் கழிந்தஎன் ஆயிழை அடியே"
— நற்றிணை: 279

மங்கல முத்திரை.

திருமணம் இல்லற வாழ்வின் நுழைவாயில். ஆயிரங் காலத்துப் பயிருக்குப் பொன்னேர் பூட்டும் விழா. மணம் என்னும் சொல்லே இவ்விழாநிகழ்ச்சியைக் குறிக்கும் திருமணம் என்பது அழகான சொல்வடிவம். இது பிற்கால வடிவமைப்பு என்றாலும் மங்கல உணர்வை எழுப்பும் சொல்லாக அமைந்தது.

மணமங்கல நிகழ்ச்சி ஒவ்வொன்றும் ஒவ்வொரு மணமாகவே கொள்ளப்படும். இன்றியமையா மங்கல நிகழ்ச்சி [42] "வதுவை மணம்" எனப்பட்டது. இந்நிகழ்ச்சியில் மங்கலச் சின்னம் பூட்டலே இன்றியமையாதது.

முற்காலத்தில் மங்கலச் சின்னமாக மங்கல நாண் பூட்டல் மட்டும் இருந்ததில்லை. மங்கல நாண் அல்லது தாலி அணிவிக்காமல் சான்றோர் முன்னிலையில் அவர் வாழ்த்த மணமகன் "முல்லைச் சூட்டு" என்னும் முல்லைச் செண்டைத் தலையில் சூட்டுவான். மங்கல மகளிர் முல்லையும் நெல்லும் தூவி வாழ்த்துவர். திருமணம் நிறைவேறும்.

மங்கல அணிகளாகப் பல அமைந்திருந்தன. காதணி. மூக்கணி, மார்பணி, கைவளை ஆகியன அமைந்திருந்தன காதணியும் மூக்கணியும் மங்கல அணி அளவே. மங்கலச் சின்னமாக மார்பணியாம் தாலியும் தொடி என்னும் கைவளையும் அமைந்திருந்தன. ஆனால், தாலி என்னும் மங்கல நாணை இலக்கியங்கள் தெளிவாகவும் பிடிப்பாகவும் குறிக்கவில்லை.

[43] "ஈகை அரிய இழை அணி" என்கின்றது புறநானூறு.

---

42 "வதுவை மன்றல் மணம் கலியாணம்"
— பிங்கலம்: 1951

43 புறநானூறு: 127 : 5

[44] "மறுவில் மங்கல அணி" என்கின்றது சிலம்பு.

இவை தாலியைக் குறிப்பதாக உரையாசிரியர்கள் அரைகுறையாகவே எழுதியுள்ளனர்.

தாலி என்றால் என்ன? அது எப்பொருளில் துவங்கி எவ்வாறு தொடங்கி எவ்வாறு தொடர்ந்தது?

தாலம் என்னும் சொல்லுக்கு பனை, நாக்கு, நிலம், உண்கலம் எனும் பலபொருள்கள் உள. பனை ஓலையில் பெயரும் வாழ்த்தும் பொறித்து நாணில் கட்டிக் கழுத்திலோ கைகளிலோ கட்டினர். கழுத்தில் கட்டப்பட்டது அசைந்தாடும். இவ்வாறு அசைந்தாடும் அணிகள் தாலி எனப்பட்டன. அதன் இடத்தினைப் புலிப்பல் பிடித்துக்கொண்டது.

ஒரு வீரன் தன் வீரத்தின் அறிகுறியாகத் தான் கொன்ற புலியின் பல்லைக் கொணர்ந்து அதனையே மங்கலச் சின்னமாக அணிவித்தான். இஃது அக்குடும்பப் பழக்கமாகி பல்கிப் பரவி பெருமரபாகிவிட்டது. இப்புலிப்பல் தாலி சிறுவர்க்கும் அணிவிக்கப்படுவதுண்டு.

[45] "புலிப்பல் தாலிப் புன்றலைச் சிறார்" என்று புறநானூற்று அடி குறிப்பிடுகின்றது.

மங்கல நாணை உரையாசிரியர்கள் மங்கலச் சூத்திரம் என்று எழுதிக்காட்டினர். மங்கல நூல் என்றும், மங்கல நாண் என்றும் வழங்கினர். [46] "பொன்தாம்பு" என்று தேவாரம் பாடுகின்றது. "மறுவில் மங்கல அணி" என்பதற்கு அரும்பத உரை ஆசிரியரும் அடியார்க்கு நல்லாரும் மங்கலச் சூத்திரமும் ஆகும் என்று அரைகுறையாகவே குறித்தனர். இதற்குக் காரணம் உண்டு.

---

44 சிலப்பதிகாரம்: 2 : 64

45 புறநானூறு : 374.

46 "பொற்றும்பு காணாதே போதியோ பூம்பாவாய்"
சம்பந்தர் தேவாரம் : மயிலாப்பூர் : 9.

கண்ணகியார் கணவனை இழந்து மதுரையை விட்டு நீங்கும் எல்லையில் தாம் மங்கலத்தை இழந்ததன் அறிகுறியாக ஒன்றைச் செய்தாள். அங்கிருந்த [47] **கொற்றவை கோவிலின்** முன் தாம் கையில் அணிந்திருந்த வளையலை — சங்கு வளையலை உடைத்ததாக உள்ளது. அதுபோதும் மங்கல நாண் குறிக்கப்படவில்லை.

47 "கொற்றவை வாயில் பொற்றொடி தகர்த்து"

இவ்வாறு கைம்பெண் ஆனதும் கைவளையைக் கழற்றுவதையும் உடைப்பதையும் பண்டை இலக்கியங்கள் பாடுகின்றன:

48 "அறனில் கூற்றம் திறனின்று துணிய
ஊழின் உருப்ப வெருக்கிய மகளிர்
வாழைப் பூவின் வளைமுறி சிதற"

'போர்க்களத்தில் கூற்றுவன் சிறிதும் அறம் பார்க்காமல் வீரனைக் கைப்பற்றத் துணிந்தான். அந்த இழப்பால் மார்பில் அறைந்துகொண்டே ஓலமிட்ட அவனது உரிமை மகளிர் தமது கையிலணிந்திருந்த வளையல்களை முறித்து வாழைப்பூ இதழ் சிதறுவது போன்று சிதறினர்' என்கின்றது புறநானூறு. மேலும் அந்நூலே,

49 "தொடிகழி மகளிரின் தொல்கவின் வாடி" என்றும்

50 "கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி" என்றும் பாடுகின்றது.

---

47 சிலம்பு : 23; 181.
48 புறநானூறு : 237.
49 புறம் ; 237.
50 புறம் : 250.

இவைகொண்டும், பிற இலக்கியங்கள் அறிவிக்கும் கருத்துகள் கொண்டும் மங்கலக் கழிவிற்குக் கைவளையைக் கழற்றுதல் மரபாக இருந்ததை உணரலாம். எனவே, இக் கைவளையலே மங்கலச் சின்னமாக அணியப்பட்டிருக்க வேண்டுமன்றோ? அதனையும் சங்க நூல்கள் காட்டுகின்றன:

[51] "மணம்புணர்ந்து ஓங்கிய அணங்குடை நல்லில்
ஆய்பொன் அவிர்தொடிப் பாசிழை மகளிர்" —என்னும் மதுரைக் காஞ்சி அடிகள் இதனைக் குறிக்கின்றன. மணமகளது தந்தை இடுவளையை வழங்குவதும், மணமகன் மணமகளுக்கு அணிவிப்பதும் மணமகன் வீட்டார் பரிசமாக வளையை அணிவிக்கச் செய்வதும் இலக்கியங்களில் உள்ளன.

இக்காலத்துக் கரணங்களில் கங்கணம் கட்டுதல் என்பது ஒன்று. இது மங்கலச் சின்னமாகக் கைவளையலை அணிவித்த மரபு தடம் புரண்டதைக் காட்டுவதாகும். முன்னர் மகளுக்கு மட்டும் அமைந்தது இதுபோது இருவர்க்கும் ஆயிற்று. வளைக்கு மறுபெயர் கங்கணம் என்பதைப் பிங்கல நிகண்டு:

[52] "வளையும் தொடியும் கடகமும் கங்கணம்" — எனச் சொல்கின்றது.

இவை நிற்க,

மண நிகழ்ச்சிகள் யாவும் மணமகளது பிறந்த வீட்டிலேயே நிகழும். மணமகளை அழைத்தல், பரிச விழா, சிலம்பு கழி நோன்பு, மணமகனுக்கு மயிர் மண்ணுதல், மணமக்களை நீராட்டுவிழா, வதுவை மணம், முதல் இரவு நிகழ்ச்சி ஆகிய யாவும் மணமகளது தாய் வீட்டிலேயே நிகழும். இப்போதும் மாமியார் வீட்டிற்கு மணமகன் செல்வதை "மருவுங்க" என்று மருஉ மொழி

---

51 மதுரைக்காஞ்சி: 578, 579.
52 பிங்கல நிகண்டு: 1177.

யாகக் குறிப்பர். மணமகன் மணமகளைத் தழுவ — மருவ — செல்வதையே இவ்வாறு வழங்கினர்.

[53] திருமண நிகழ்ச்சியை ஊரார்க்கு அறிவிப்பர். இதனை "அகலுள் மங்கல அணி எழுந்தது" எனச் சிலம்பும் குறிக்கின்றது.

மணமகளுக்கு மணமகன் ஆடை, அணிகலன்களை வழங்குதல் பரிசம், முலைவிலை, கூறைகொடுத்தல், பொன் விலை எனப்பட்டன. இன்றும் மலைஞாலத்தில் "புடகொடா" என்னும் வழக்கும் பழக்கமும் புடவை கொடுத்தலை நினைவிற்குக் கொண்டுவருகின்றன.

மண நிகழ்ச்சிகளாக இவை யாவும் நிகழினும் இவற்றிற் கெல்லாம் இழையோட்டமாக மலர் எல்லா முனையிலும் இடம் பெற்றுத் திகழும். மலரினும் முல்லை மலர்தான் தவறாது இடம் பெறும்.

ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் முல்லையே இடம் பெற்று மங்கலமாக்கியது. மணமக்களை நீராட்டும் போது முல்லை மலரைப் பெய்து நீராட்டுவர்.

முல்லை கற்புக்குரிய மலர்.
மணமகளைக் கற்பரசியாக முடிசூட்டுவதே மண மங்கலம். அம்முடிசூட்டு "முல்லைச் சூட்டு" என்னும் முல்லை மலர்ச் செண்டை மணமகன் சூட்டுவதாகும்.
அடுத்து மணமக்கள் முல்லைத் தாரை அணிவர்.
மணமக்களை வாழ்த்தும் மங்கல மகளிர் முல்லையுடன் சாலி நெல்லைக் கலந்து வாழ்த்துக் கலவையாக்கிப் பெய்வர்.
இது வாழ்த்தாகும்.
இதனை,

---

[53] சிலப்பதிகாரம்: மங்கலவாழ்த்துக்காதை: 47.

54 "வெண்ணிற மலரும், தண்ணறுஞ் சாலியும்
சென்னியும் உச்சியும் கேடுபடத் தெளித்து" வாழ்த்தியதைப் பெருங்கதை வண்ணிக்கின்றது. இதனை மேலே விரிவாகக் காணலாம்.

அடுத்து,
முதலிரவு மங்கலக் கட்டில் முல்லை மலராலேயே ஒப்பனை செய்யப்படும்.
மணமக்களை முல்லை மலரின், "சின்மலர் கொடுதூவி மங்கல நல்லமளி" ஏற்றுவர்.

இவை யாவற்றையும் தொகுத்து நோக்கினால் முல்லை மங்கலமணத்தில் இன்றியமையா இடம் பெறுவதும், கற்பின் சின்னமாக அமைந்து இல்லறப் புகழை நிலைநாட்டுவதும் இன்ப வாழ்வில் நீங்காச் சின்னமாக நிற்பதும் விளங்கும்.

எனவே,
தாலியும் ஒரு மங்கல முத்திரை.
கைவளையும் ஒரு மங்கல முத்திரை.
முல்லை மலரும் ஒரு மங்கல முத்திரை.
இவற்றுள் முன்னிரண்டும் நிலைத்து விளங்கும் முத்திரைகள்.
முல்லை அன்றன்று புதிது புதிதாக மணக்கும் முத்திரை.
முன்னவை இரண்டும் செயற்கை முத்திரைகள்.
முல்லையோ இயற்கை முத்திரை.
முல்லை மணமங்கல முத்திரை.
மணம் பரப்பும் முத்திரை.

54 பெருங்கதை: இலாவண காண்டம்: 4: 152, 155

# முல்லையொடு நெல்

அரிசி மழை.

"மாங்கல்யம் தந்துநானேன
மம ஜீவநதுநா ஹேற
கண்டே பந்நாமி சுபஹே
சஞ்சீவ சரத சதம்"

— என்று ஐயர் ஓதி மணமகன் கையில் மங்கலிய நாணை வழங்கிக் "கெட்டி மேளம்; கெட்டி மேளம்" என்றார். மங்கல இசை முழங்க, மணமகள் கழுத்தில் மணமகன் மங்கலியத்தைப் பூட்டினான். பூட்டும் நேரத்தில் எல்லாப் பக்கங்களிலிருந்தும் மழை போன்று அரிசிகள் பாய்ந்துவந்து விழுந்தன. மணவிழாவிற்கு வருகைதந்த பெருமக்கள் மணமக்களை வாழ்த்தும் நோக்கத்தில் தூவப்பட்ட வாழ்த்துக் கலவை அவை.

வாழ்த்தித் தூவுவோர் தலை, வாய், உடை என்று பார்த்தோ தூவுவர்? தலையிலும் அரிசி விழுந்தது; வாயிலும் அரிசி விழுந்தது. தலைக்கும் அரிசியாயிற்று; வாய்க்கும் அரிசியாயிற்று. இதனால், 'மணமக்களுக்கு வாய்க்கரிசி போட்டனர்' என்று சொல்லக்கூடாது. ஏனெனில், அப்படிச் சொல்வது அவலச் சொல்லாகும்.

அத்துடன், தூவப்பட்ட அரிசி மஞ்சள் பூசப்பட்டது. வாய்க்கரிசி என்பது மஞ்சள் ஏறாத வெள்ளை அரிசி. ஆனால், மஞ்சள் ஏற்றப்பட்டது கொண்டே ஓர் உண்மையை உணர முடிகின்றது. 'மஞ்சள் கூடினால்தான் அரிசி மங்கலத் தன்மை பெறும். மஞ்சள் இன்றேல், அரிசி மங்கலப் பொருள் அன்று' — என்பது உண்மையன்றோ?

ஆம், அரிசி மங்கலப் பொருள் அன்றுதான். அஃது உணவிற்காக உரிக்கப்பட்ட பொருள். அவ்வகையில் அஃது

இன்றியமையாத சிறப்புடையது. ஆனால், உணவிற்கு அன்றித் தனியே தூவிப் பயன்படுத்தும்போது அது பலிப்பொருள் வெள்ளரிசி பலிப்பொருள் என்பதை,

[1] "தூய்மையான வெள்ளை அரிசியைப் பலிப் பொருளாகத் தூவினர்"

- எனப் பட்டினப்பாலை கூறுகின்றது. வெள்ளரிசி தனியாக மட்டும் அன்றி ஆட்டுக் குருதி கலக்கப்பட்டும் பலிப்பொருளாகும். அது வெறியாட்டுக்கு உரிய பலிப்பொருள். இக் கருத்தை,

[2] "ஆட்டுக் குருதியுடன் கலந்த தூய்மையான வெள்ளை அரிசியை வெறியாட்டின்போது சிறு பலியாகச் செய்தனர்"

- எனத் திருமுருகாற்றுப் படையிலும் பிற இலக்கியங்களிலும் காண்கின்றோம்.

வெள்ளரிசி பலிப்பொருளாவது போன்று அரிசியில் சமைக்கப்பட்ட சோறும் பலிப்பொருளாயிற்று.

[3] "காவல் மன்னர் கடைமுகத் துடுக்கும் போகுபலி வெண்சோறு போல" - என்று உறையூர் முதுகூத்தனார் பாடல் அறிவிக்கின்றது. இங்கும் சோறு "வெண்சோறு" என்று குறிக்கப்பட்டுள்ளதும் நோக்கத் தக்கது.

---

1 "வாலரிசிப் பலிசிதறி" - *பட்டினப்பாலை : 165.*

2 "குருதியொடு கலந்த தூவெள் ளரிசி
சில்பலி செய்து" - *திருமுருகாற்றுப்படை : 233, 234.*

3 "நெல்லும் பொரியும் சில்பலி யரிசியும்
யாங்கணும் பரந்த ஓங்கிரும் பறந்தலை"
- *மணிமேகலை 6 : 95, 96*

வாய்க்கு அரிசி.

பூம்புகாரின் புறநகரில் "சக்கரவாளக்கோட்டம்" என்பது ஒரு பகுதி. அங்கு சம்பாபதி, கந்திற்பாவை முதலிய சிறு தெய்வங்களுக்குக் கோட்டங்கள் இருந்தன. "உலக அறவி" என்னும் பொது அறமன்றம் இருந்தது. இவற்றுடன் இடு காடும் சுடுகாடும் இருந்தன. இவற்றால் அதனைச் "சுடுகாட்டுக் கோட்டம்" என்றும் ஊரார் வழங்கினர்.

அக்கோட்டத்தை விவரிக்கும் மணிமேகலைக் காப்பியம்,

3 'சக்கரவாளக்கோட்டம் என்றும் அச் சுடுகாடு
பெயர்பெற்றது; பெரியது. அங்கு எங்கும்
நெல்லும் பொரியும் சிறு பலியாகத் தூவப்
பட்ட அரிசியும் பரவிக் கிடக்கும்'

- என்று அங்கு சிதறிப் பரவிக் கிடக்கும் பொருள்களைக் காட்டுகின்றது.

சிறு பலியாகத் தூவப்படும் அரிசி "சில்பலி அரிசி" எனப்படும். இவ்வாறு சிறு பலிப்பொருளாகக் குறிக்கப் பட்ட வெள்ளரிசி பிணங்களுக்கு வாயில் தூவப்பட்ட பிணப் பலிப்பொருள். தெய்வங்களுக்கு அரிசியைப் பலிப்பொரு ளாகத் தூவுவது போல இறந்தோர்க்கும் பலிப் பொருளாக அரிசி தூவப்பட்டது. பிணத்தின் வாய்க்குப் போடப்படு வதால் இது "வாய்க்கரிசி" எனப்பட்டது.

மாந்தன் உயிருடன் வாழ உண்டு பழகிய அரிசியைத் தமிழர் வாழ்வின் இறுதியிலும் வாயில் போட்டு ஒரு மன அமைதி கொண்டனர். பிணம் பசியோடு போகவேண்டாம் என்ற எண்ணம் போலும். பசி போக்குவதை ஒரு நோன் பாகக் கொண்ட தமிழர் பிணத்திற்கும் பசி உண்டென்று கருதினர் போலும்.

---

3 "நெல்லும் பொரியும் சில்பலி யரிசியும்
யாங்கணும் பரந்த ஓங்கிரும் பறந்தலை"
– மணிமேகலை 6 : 95, 96.

இவ்வாறு பிணத்திற்கு வாயில் போடப்படும் செயல் இல்லத்து முற்றத்திலும் நிகழும்; சுடுகாட்டிலும் நிகழும். இல்லத்தில் பெண்கள் வாய்க்கரிசி இடுவர்; சுடுகாட்டில் ஆடவர் இடுவர்.

அரிச்சந்திரன் வீரவாகு என்னும் சுடுகாட்டுப் பணியாளனிடம் அடிமையானன். வீரவாகு சுடுகாட்டுக் கட்டணப் பொருள்களில் அரிச்சந்திரனுக்கு உரியவைதயும் தனக்குச் சேர்க்க வேண்டியவைகளையும் குறிப்பிட்டான்.

5 "எனக்குநீ பணமும், கொள்ளி
ஆடையும் இனிது நல்கி,
உனக்கு வாய்க்கரிசி தந்தேன்,
உண்டிரு பசியை நீக்கி"

—என்றது அரிச்சந்திரபுராணம்.

பாம்பு தீண்டி இறந்த மகன் தேவதாசனைச் சுடலையில் எரியூட்டும் சந்திரமதியைக் கண்ட அரிச்சந்திரன் சுடலைக்குச் சேரவேண்டிய கட்டணத்தைக் கேட்டான். தன் இல்லாமையைச் சொல்லி அழுதாள். தன் மனைவி என்றறியாத நிலையில் அவன்,

6 "அன்னவன் தான் படியாக எனக்குத் தந்த
வாய்க்கரிசி யானளிப்பேன் அறிதி என்றான்"

சந்திரமதி மகனுக்கு வாய்க்கரிசி இடுவதற்கு உதவுவதாகக் குறித்தான். இது கொண்டும் சுடுகாட்டில் வாய்க்கரிசி இடும் பழக்கம் இருந்ததை உணரலாம்.

வாய்க்கரிசியைப் புத்தரிசியாகவே கொண்டனர். இறந்த செய்தி வந்ததும், இல்லத்துப் பெண்கள் வீட்டில்

---

5 அரிச்சந்திரபுராணம்: காசிக்காண்டம்: 62
6 ,, : மயான காண்டம்: 40.

உள்ள நெல்லை எடுத்து உரலில் இட்டுக் குற்றுவர். குற்றுவதிலும் முதற் குற்றிலேயே அரிசியாகும் காவி நிற அரிசியை —தீட்டி வெள்ளையாகாத அரிசியையே வாய்க்கரிசியாகக் கொண்டனர். இது "கொழி அரிசி" எனப்படும். இவ்வாறு வாய்க்கரிசிக்கென நெல்லெடுத்துக் கொட்டுவதைப் பிற்காலத் தனிப்பாடல் ஒன்று,

> 7 "பரந்தாடி மாரடித் துறவினர்கள் வாய்க்கரிசிப்
> படிநெற் கொணர்ந்து கொட்ட"

—என்று பாடிக்காட்டுகின்றது.

இவ்வாறு அச்சந்தரும் தெய்வங்களுக்கும், அவலந்தரும் பிணங்களுக்கும் பலிப்பொருளான அரிசி எவ்வாறு திருமணத்தில் தூவப்படும் வாழ்த்துப் பொருள் ஆயிற்று? மஞ்சள் பூசிக்கொண்டதால் ஆயிற்று? அவ்வாறு ஆனால், அரிசி மஞ்சள் பூசி மங்கலப் பொருள் ஆனதைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் எங்கேனும் குறித்திருக்கும். ஆட்டுக் குருதி கலந்து பலிப்பொருள் ஆனது குறிக்கப்பட்டமை போன்று இஃதும் குறிக்கப்பட்டிருக்கும். பின்னர் எவ்வாறு இப் பழக்கம் புகுந்தது? இது புதிதாகப் புகுத்தப் பட்டதா? மற்றொரு தமிழ் மரபைத் தள்ளிவிட்டு இடம் பெற்றதா?

**நெல் வழிபாட்டுப் பொருள்.**

மேலே சக்கரவாளக் கோட்டத்தில் சிதறிக் கிடந்தனவாகக் காணப்பட்ட பொருள்களில் பொரியும் நெல்லும் அரிசியுடன் கூறப்பட்டன. அவற்றுள் அரிசி மட்டும் "சில் பலி" என்று அடைமொழி கொடுக்கப்பட்டு மற்றைய இரண்டிலிருந்தும் பிரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு பிரித்துக் காட்டுவது ஓர் இலக்கிய உத்தி. மூன்றனுள் அரிசி மட்டும் பலிப்பொருள். மற்றைய இரண்டும் பலிப்பொருள் அல்ல என அறிவிக்கும் குறிப்பு இது.

---

7 தனிச்செய்யுட் சிந்தாமணி:
அவிநாசிப் புலவர் பாடல்: 1.

பலிப்பொருள் வேறு. காப்புப்பொருள் வேறு. வழிபாட்டு — வாழ்த்துப் பொருள் வேறு. படையல் பொருள் வேறு.

பொரி, அவல் முதலியன பிணத்தைப் பேய் என்னும் காற்றுவி அணுகாமல் காக்கச் சிதறப்படும் காப்புப் பொருள்கள். அக்கோட்டத்தில் உலவியதாகக் கருதும் காற்றுவிக்குச் சிதறப்பட்ட காப்புப் பொருளாம். பொரியும் சிதறிக் கிடந்தது [8] பொரி இவ்வாறு சிதறப்படுவதைத் திருமுருகாற்றுப்படை "செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி" — என்கிறது.

நெல், மலர் அறுகம்புல் முதலியன தெய்வத்தை வழிபடவும் வாழ்த்தவும் கொள்ளப்படும் மங்கலப் பொருள்கள். சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லாரும்,

[9] "மலரையும் அறுகையும் நெல்லையும்
மங்கலமாகச் சிதறி" — என்றார்.

இங்கு ஒன்றை நினைவு கொள்ளவேண்டும். நெல், புல், மலர் மூன்றும் இயற்கை விளைவு. பொரி, அவல், அரிசி, சோறு முதலியவை இயற்கை விளைவின் சிதைவு. நெல்லின் சிதைவாகிய இவை மங்கலப் பொருளாகக் கொள்ளப்படாமைக்குக் காரணம் இவை சிதைவான பொருள்கள் என்பது போலும்.

மலர் பலியாகத் தூவப்படுவதும் உண்டு. ஆயினும் இது பிணப் பலிப்பொருள் அன்று. தெய்வப் பலிப்பொருள் ஆகும்.

சக்கரவாளக் கோட்டத்தில் அமைந்த சம்பாபதி, கந்திற்பாவை முதலிய தெய்வங்களை வழிபட்டு—வாழ்த்திச் சொரிந்த நெல்லும் சிதறிக் கிடந்தது. இவ்வகையில் சிதறிக்

---

8 திருமுருகாற்றுப்படை : 231

9 சிலப்பதிகாரம்: 6: 124 உரை.

கிடந்த மூன்று வகைப் பொருள்களும் மூன்று நோக்கத்தில், மூன்று வகை நிகழ்ச்சிகளில் சொரியப்பட்டவை; சிதறப் பட்டவை.

நெல்லைச் சொரிந்து தெய்வத்தைப் பரவும் மரபு உண்டு.

ஒரு சிற்றூர். வீரக்குடி மரபினரே வாழும் ஊர் அது. போரில் வீரங்காட்டி இறந்தோர், களிற்றை எதிர்த்து வீழ்த்தித் தானும் வீழ்ந்த மறவர்க்கு அவ்வூரில் நடுகற்களே உள்ளன. அவற்றைத்தாம் மகளிர் வழிபடுவர். இந்தக் கற்களாகிய தெய்வங்களன்றி நெல்லைத்தூவி வழிபடும் வேறு தெய்வங்கள் இல்லை என்று அந்தச் சிற்றூர் புறநானூற்றில் வண்ணிக்கப்படுகின்றது.

10 "கல்லே பரவின் அல்லது
நெல்லுகுத்துப் பரவும் தெய்வமும் இலவே" என்னும் இவ்வடிகள் தெய்வத்திற்கு நெல் சொரிந்து வாழ்த்து வதைக் குறிக்கின்றன.

**நெற்கதிரைச் சூடல்.**

மலரைத் தலையிற் சூடிக்கொள்வது போல் நெற்கதிரையும் தலையிற் சூடிக்கொள்வது உண்டு. மலரோடு சேர்த்தும் சூடுவர்; நெற்கதிரைத் தனியாகவும் சூடுவர்.

சீவக மன்னனுக்கு நகர்ப்பகுதியில் இன்பமேற்றிய மகளிர், அவனுக்கு நாட்டுப்புறவயற்பகுதியிலே இன்பமேற்ற முனைந்தனர். அதற்கேற்ப,

---

10 புறநானூறு: 335: 11, 12.

[11] "அணிகளால் ஒப்பனை செய்யப்பட்ட பெண் யானை மீது ஏறிப் போயினர். வயலில் அடித்தாள் தழைத்துள்ள செந்நெல் கதிர்களைச் சூடிக்கொண்டனர். தம் ஆர்வம் தணியாதவர்களாக வயலில் விளையாடினர். மன்னன் தம் அழகைப் பாராட்ட இருந்தனர்"
—என்று பெண்கள் மகிழ்ச்சிக் காலத்தில் நெற்கதிரைச்சூடி அழகு செய்து கொண்டதைக் குறிக்கின்றது சீவக சிந்தாமணி. இது நெற்கதிரை மட்டும் சூடிக்கொண்டதற்குச் சான்று இஃது அரசகுல மகளிர் நெற்கதிரைச் சூடிய செய்தி.

உழவர் குல மகளிர் நெற்கதிரைச் சூடிக்கொண்டதைச் சேக்கிழார் காட்டுகின்றார்.

[12] 'வயலில் எளிய புலைச்சியப் பெண்கள் கூந்தலில் விரிந்த குவளைப் பூவைச் சூடியிருந்தனர். குவளையிலிருந்து தேன் வழிந்தது. அத்துடன் சேர்த்து நெற்கதிரைச் சூடினர்" —எனப் பெரிய புராணம் உழவர் குல மகளிர் மலருடன் நெற்கதிர் சூடியதைக் காட்டுகின்றது.

அரசகுல, உழவர் குல மகளிரேயன்றி மன்னவரும்— ஆடவரும்— நெற்கதிரைச் சூடிக்கொள்வது உண்டு.
பாரி மன்னன் போருக்குப் புறப்பட்டார். அவன் வெற்றி கருதி ஆம்பல் மலரைச் சூட நினைந்தான். அத்துடன் மங்கலங்கருதி நெற்கதிரையும் எடுத்து,

---

[11] "பணியார் பண்ணுப் பிடியுயர்ந்து,
பருக்காற் செந்நெற் கதிர்சூடித்
தணியார் கழனி விளையாடித்
தகைபாராட்டித் தங்கினார்"
—சீவக சிந்தாமணி: 2699

[12] "........................தளையவிழ்பூங் குவளைமது
விள்ளும்பைங் குழற்கதிர்நெல்
மிலைச்சிய புன் புலைச்சியர்கள்" —பெரியபுராணம்:
திருநாளைப்போவார்: 10.

[13] வளமான வயலில் விளைந்த நெற்கதிரைக் கையில் கொண்டு அத்துடன் பருத்த தாளையுடைய ஆம்பல் மலரோடு சேர்த்துச்சூடினான்"

—அகநானூறு காட்டும் இக்கருத்தால் மன்னர் நெற்கதிரை மலருடன் சூடிக்கொண்டதை அறிய முடிகின்றது.

நெற்கதிரை மங்கலமான மலரணி போன்று மகளிரும் ஆடவரும் சூடினர், அரண்மனையினரும் சூடினர். வயல் வெளியினரும் சூடினர். மலரோடு சேர்த்தும் சூடினர். தனியாகவும் சூடிய பழக்கத்தையும் காண்கிறோம்.

**நெற்கதிர்மாலை.**

நெற்கதிர் மலருடன் தனியாகச் சூடப்படுவது மட்டுமின்றி மலருடன் மாலையாகத் தொடுக்கப்படுவதும் உண்டு. உழவுத் தொழிலில் ஆண்டு தோறும் கடைப்பிடிக்கும் முதல் மங்கல நிகழ்ச்சி "பொன்னேர் பூட்டுதல்" ஆகும். இஃது ஒரு மங்கல நிகழ்ச்சியாதலால் இலக்கியங்கள் இதனை "ஏர் மங்கலம்" என்று பேசும். அது போது குவளைப் பூ, அறுகம்புல் இரண்டையும் கலந்து, நெற்கதிரை வைத்து மாலையாக்கி இப் பொன்னேர்க்கு அணிவிப்பர்.

[14] கொழுங்கொடி அறுகையும் குவளையும் கலந்து
விளங்குகதிர் தொடுத்த விரியல்" (விரிந்த மாலை) சூட்டி

—என்று சிலப்பதிகாரம் காட்டுகின்றது. நெல்லை விளைவிப்பதற்கு நெல்லையே மாலையாக்கியது மங்கலத்தினும் மங்கலம். இதுபோன்று நாற்று நடும்போது அந்நாற்றையே மங்கல அணியாக, நாற்று நடும் உழத்தியர் சூடிக் கொண்டதையும் சிலம்பு காட்டுகின்றது.

---

13 "செழுஞ்செய் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந்தாள் ஆம்பல் மலரொடு கூட்டி"
அகநானூறு : 78. : 17, 18.

14 சிலப்பதிகாரம் ; 10. : 132. 133.

இவ்வாறாக,
நெல்—மங்கலப் பொருளாக,
தெய்வத்தைப் பரவத் தூவப்பட்டது.
தலையிலே சூடப்பட்டது.
மாலையாக அணியப்பட்டது.

நெல் வழிபாட்டுப் பொருளாகத் தனியே தூவப்பட்டது போன்று மலருடன் கலந்தும் தூவப்பட்டது.

மாதவிபால் சென்றான் கோவலன். அவன் பிரிந்ததால் கண்ணகியார்க்கு இல்லறம் பேண முடியாத குறை நேர்ந்தது. இது வாழ்வியல் குறை. இக்குறை நீங்கிக் கண்ணகியார் வாழ்வியல் நலம் பெறக் கணவனை மீண்டும் பெற வேண்டும் என்று அவளது தோழி தேவந்தி என்பாள் விரும்பினாள். அதற்காகப் பாசண்டச் சாத்தன் என்னும் தனது தெய்வத்தை வழிபட முற்பட்ட தேவந்தி,

[15] "அறுகம்புல்லையும் சிறுபூளைப் பூவையும் எடுத்து நெல்லொடு கலந்து தூவி வழிபட்டாள். கண்ணகியார் கணவனோடு கூடி இல்லற நலம் பெறுக" – என்று வேண்டினாள். இங்கு பாசண்டச் சாத்தன் சிறு தெய்வம் ஆதலால் நெல்லுடன் சிறுபூளைப் பூவும் அறுகம் புல்லும் இடம் பெற்றன.

### இல்லுறை தெய்வ வழிபாடு

கோட்டங்களில் தெய்வங்களை வைத்துப் பரவியது போன்றே வீட்டகங்களிலும் இல்லுறை தெய்வங்களுக்கு இடம் வைத்து இல்லறமகளிர் பரவினர். வாழ்வாங்கு வாழ்ந்து மங்கலியத்துடன் மறைந்த மங்கலப் பெண்களை இல்லுறை தெய்வங்களாகக் கொண்டனர். பருவம் அடைந்து

---

[15] "அறுகு சிறுபூளை நெல்லொடு தூய்ப்
பெறுக கணவனோடு" —சிலப்பதிகாரம்: 10. : 127.

திருமணம் பெருது கன்னியாகவே இறந்த பெண்களையும் இல்லுறை தெய்வங்களாகக் கொள்வதுண்டு. அன்னர் பருவமடைந்து தாய்மைத் தன்மை பெறும் பக்குவம் பெற்றதனல் அவரும் மங்கலப் பெண்களாகவே கொள்ளப் பட்டனர்.

வீட்டின் ஓர் அறையில் மாடம் அமைத்து அவர் நினைவாக அதில் விளக்கு வைத்து நாள்தோறும் ஏற்றி வணங்கினர். பகற்பொழுது கழிந்து இரவு தொடங்கும் நேரத்தில்,

16 "இரும்பால் செய்யப்பட்ட விளக்கில் நெய் தோய்ந்த திரியை இட்டனர். விளக்கேற்றினர். நெல்லையும் மலரையும் தூவிக் கை தொழுது வழிபட்டனர்"

இக்கருத்தினைப் பல இலக்கியங்களிலும் காணலாம். எனவே, இவ்வழிபாடு ஓர் இல்லறக்கடமையாக இருந்ததை உணர முடிகிறது.

இன்றும் இல்லங்களில் "சாமி அறை" என்ற ஓர் அறை இருத்தலும், அங்குள்ள மாடத்தில் விளக்கிருத்தலும், அவ்விளக்கு "நாச்சியார்" எனப்பெண்பாலாய்ச் சொல்லப் படுதலும், அதனிலும் "நாச்சியார்" என "ஆர்" விகுதி கொடுத்துப் பெருமைப்படுத்தலும் நாம் அறிந்தவை. பெண்களைக் "குடும்ப விளக்கு", "குல விளக்கு" என்பர். இலக்கியங்களில்

---

16 "இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ
நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது"
—நெடுநல்வாடை: 42, 43.

17 "மனைக்கு விளக்கம் மடவார்"—என்றும்

18 கடவுள் கற்பொடு குடிக்கு விளக்காகிய
புதல்வர்ப் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்னராட்டி"—என்றும் மகளிர் விளக்காகப் பேசப்பட்டுள்ளனர். எனவே, மகளிரே இல்லுறை தெய்வங்களாக விளக்கு வருவில் கொள்ளப்பட்டனர்.

இல்லுறை தெய்வ வழிபாடாக அந்திப் போதில் விளக்கை மங்கல மகளிர் ஏற்றி, மலர் வைத்து வணங்குதலும் இக்காலப் பழக்கமாக உள்ளது. இவ்வழிபாடு நாள் தோறும் நிகழும் அந்தி வழிபாடு. ஆண்டிற்கொருமுறை "மங்கலிய வழிபாடு" (சுமங்கலியப் பிரார்த்தனை) நிகழ்த்தப்படுதலும் உண்டு.

மங்கல மகளிர் விளக்கு உருவாக இல்லுறை தெய்வமாகி விளக்கு வழிபாடே இல்லுறை தெய்வ வழிபாடு ஆனது. இவ்வழிபாடு இல்லங்களில் மட்டும் அன்றி வளமனை, வணிகமனை முதலிய எல்லா இடங்களிலும் இரவுப்போதின் தொடக்கத்தில் விளக்கேற்றும் நிகழ்ச்சி யாகப் பரவியது.

பூம்புகார்ப் பட்டினப் பாக்கத்தின் கடைத்தெருவில் திருமகள் இருக்கையாய் விளங்கும் வணிக இல்லங்களில்,

19 "மங்கல வாழ்த்துக்கு உரிய மகளிர் அந்தியில் மலரைச் சூட்டி விளங்கவைத்த அழகிய விளக்கை ஏற்றினர். பசுமையாகத் தழைத்த கொடி அறுகம் புல்லையும் நெல்லையும் தூவிப் பரவினர்"

—எனச்சிலம்புகாட்டுகின்றது.

---

17 தண்டியலங்காரம்: மேற்கோள் வெண்பா.

18 அகநானூறு; 184: 1—3.

19 "மலரணி விளக்கத்து மணிவிளக்கு எடுத்தாங்கு
அலர்கொடி அறுகும் நெல்லும் வீசி
மங்கலத்து ஆசியர்"

—சிலப்பதிகாரம்: 6. : 123. 125.

இன்றும் விளக்கு பொருத்தப்படும் எல்லா இடத்தும் பொருத்தப்பட்டதும்—அது மின் விளக்காயினும் பெண்டிரும் ஆடவரும் தொழுவதைக் காண்கின்றோம்.

[20] பொது மன்றங்களிலும் இவ்வாறு பெண்கள் விளக்கேற்றி மலர் சூட்டினர் எனப் பட்டினப்பாலையும் குறிக்கின்றது.

இவ்வில்லுறை தெய்வ வழிபாட்டைக் கன்னியரோ கைம்பெண்களோ செய்யார். மங்கல மகளிரே ஆற்றுவர். ஆற்றிய பின்னர் இல்லத்தில் உள்ளவர்க்கு வாழ்த்து உரைப்பார். இவ்வழிபாட்டு நிகழ்ச்சியில் நெல்லும் மலரும் தூவப்பட்டதை அறிவிக்கும் நெடுநல்வாடையும், சிலப்பதிகாரமும் நெல்லுடன் தூவப்பட்ட மலர் இன்ன மலர் என்று காட்டவில்லை. இவ்வழிபாட்டு மரபை மற்றோர் இடத்தில் காட்டும் சிலப்பதிகாரம்,

[21] "வீடுகளில் எல்லாம் அரும்பு விரிந்த—கற்புக்கு நிகரான —முல்லை மலரை நெல்லொடு கலந்து தூவி அந்தியில் மாலை சூட்டி அழகிய விளக்கேற்றினர்"
—என்று நெல்லொடு தூவப்பட்ட மலர், முல்லை மலர் என்று குறிக்கின்றது.

**முல்லையும் கற்பும்.**

முல்லை மலர் கற்புக்கு உரிய மலர்.
முல்லைக்கே கற்பு என்று ஒரு பெயர்.

---

20 "கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி
அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்கம் ஏறிப் பலர்தொழ"
— பட்டினப்பாலை: 246 — 248.

21 சிலப்பதிகாரம்: 9: 1 3.

[22] "மௌவலும் தளவமும் கற்பும் முல்லை" — என்று சேந்தன் திவாகரம் முல்லைக்கொரு சொல் "கற்பு" என்பதைக்கூறுகின்றது.

'கட்டியங்காரன் அநங்கமாலை என்பவளது கற்பைப் பறித்தான்' — என்பதைக் கூறும் திருத்தக்க தேவர் கற்பை முல்லை என்று குறித்து,

[23] "தானுடை முல்லை எல்லாம் தாதுஉகப் பறித்திட்டானே"
— எனப் பாடினர்.

மங்கல மடந்தையர்க்கு இன்றியமையாத தொடர்புடைய மலராக முல்லை மலர் பல முனைகளில் இடம்பெற்றது. பல இலக்கியங்களும் இதனைப் பன்னிப் பன்னிப் பேசுகின்றன.

"முல்லை சான்ற கற்பின் மெல்லியல்"
— சிறுபாணாற்றுப்படை: 30.

"முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறுமகள்"
— நற்றிணை: 142.

"முல்லை சான்ற கற்பின் மெல்லியற் குறுமகள்"
அகநானூறு: 274.

இவ்வாறு முல்லையைச் சான்றுக்கிக் கற்பைக் காட்டுகின்றன. இவற்றிற்கு விளக்கம் கூறிய உரையாசிரியர்கள்,

"முல்லை சூடுதற்கு அமைந்த கற்பு" — என்றும்

"கற்பின் மிகுதி தோன்ற முல்லை சூடுதல் இயல்பு"

---

22 சேந்தன் திவாகரம்: மரப்பெயர்: 197.
23 சீவக சிந்தாமணி: 686.

— என்றும் எழுதிக் காட்டினர். இவ்வுரைகள் கொண்டு முல்லை மலரைச் சூடுவதற்கு ஒரு தகுதி வேண்டுமென்றும், அத்தகுதி கற்புத் தகுதி என்றும் அறிகின்றோம். "கற்பின் எல்லைக்கு முல்லை அளவு" என்பதையும் காண்கின்றோம். இவற்றிற்கு எடுத்துக்காட்டுகளும் காணப்படுகின்றன.

ஒப்பனை ஒன்றும் செய்துகொள்ளாத கண்ணகியார் கூந்தலில் மட்டும் மலர் சூடியிருந்தார். அதனைச் சிலம்பு.

[24] "போதுசேர் பூங்குழல்" என்றது. அதனை விளக்கிய அடியார்க்கு நல்லார் "முல்லை மலர் பற்று அருத பூங்குழல்" என்றார்.

[25] 'அழகிய நெற்றியை உடைய தலைவி முல்லை மலரைக் கற்பின் முடியாகச் சூடித் தன் பக்கத்தே வீற்றிருக்கத் தலைவன் இனிது இருந்தான்' — என்று ஐங்குறுநூறு காட்ட,

[26] 'நல்ல குலத்திற் பிறந்த கற்புடைய பெண்களுக்கு வளப்பமான முல்லை மலரைச் சூடுவது சிறப்பாகும்' — எனக் குலோத்துங்கக் கோவை விதித்துக் கூறியது. மங்கல மகளிர்க்கு முல்லை மலர் கற்போடு பேரழகு எனக் கொள்ளப் பட்டது.

முல்லையைச் செண்டாக்கித் தலையிற் சூடுவர். இது "முல்லைச் சூட்டு" எனப்பட்டது.

[27] "பன்னிறச் சுரும்பு சூழும்

---

24 சிலப்பதிகாரம்: 13: 22.
25 ஐங்குறுநூறு: 408: 2, 3.
26 குலோத்துங்கக் கோவை: 168
27 சீவக சிந்தாமணி: 624.

பனிமுல்லைச் சூட்டு வேய்ந்தார்" — எனச் சிந்தாமணி கூற, "முல்லைச் சூட்டைக் கற்பிற்குத் தலையிலே சூட்டினார்" என்று நச்சினார்க்கினியர் விளக்கினார். இம்முடிச்சூட்டைப் பெண் கடவுளர்க்கும் ஏற்றிப் பாடினர். காளியைப் பாடும் ஒட்டக்கூத்தர்,

28 "திருவடியில் அணிந்திருக்கும் அணியை நூபுரங்கள் என்னலாமோ? அவை திருமறைகள் அல்லவோ! முடியில் சூடியிருப்பது முல்லையோ? அது மேம்பட்ட கற்பு அன்றோ!" — என முல்லைச் சூட்டைக் கற்பாக்கி நயத்துடன் வண்ணித்தார்.

தமிழ் நாட்டில் கன்னிப் பெண்களுக்கெனச் சில மரபுகள் இருந்தன. அவற்றுள் ஒன்று முல்லைக்கொடி வளர்த்தல். இதனை,

29 "எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த
முற்றிழையாள் வாட முறுவலிக்கும்" — என்பது கொண்டு உணரலாம். இக்கொடி வளர்ப்பையும் பெண் கடவுளர்க்கு ஏற்றிப் பாடினார் ஒட்டக்கூத்தர். 30 தேவி கொற்றவை கைவிடாது வளர்த்த முல்லைக்கொடி நூறாயிரம் கிளைவிட்டுத் தழைத்ததாம். இக்கருத்தை விளக்கிய பழைய உரை ஒன்று,

'தேவி முல்லை வளர்த்தற்குக் காரணம் கற்புடைமை என உணர்க' — என்கின்றது. இத்துடன் காளி குமரி என்பதையும் கூட்டி உணர வேண்டும்.

---

28 "அடிச்சூட்டு நூபுரமோ? ஆரணங்கள் அனைத்துமே
முடிச்சூட்டு முல்லையோ? முதற்கற்பு முல்லையோ"
— தக்கயாகப்பரணி: 119.

29 தண்டியலங்கார உரை மேற்கோள் வெண்பா.

30 "நுதிக்கோடு கூர்கலை உகைப்பாள் விடாமுல்லை
நூறுயிரங் கிளைகொடு ஏறும்"
— தக்கயாகப்பரணி: 75

முடியேறிய முல்லை.

ஒரு பெண் பாவாடை மாற்றிச் சிற்றுடை உடுக்கும் பருவம் அடைந்தால், அடைந்த நாளிலேயே தன் இல்லத்து உள் முற்றத்தில் ஒரு முல்லைக்கொடியை நட்டு வளர்ப்பாள். அது வளர்ந்து அரும்பும் காலத்தில் அவளுக்கு மணம் பேசப்படும். அவ்வரும்பு மலரை அவள் சூடிக்கொண்டால் மணம்பெற்றுக் கற்புக்கு உரியவள் ஆவாள். இவ்வாறு முல்லைசூடிய அழகோடு "மணம்" பெறுவதையே "திருமணம்"என்றனர். திருமணம் என்ற பெயரே பெண்களால் அமைந்த பெயர்.

ஒரு கன்னிப் பெண் 'மஞ்சு விரட்டு' என்னும் "ஏறு தழுவலைக் கண்டு நின்றாள். காளையை அடக்கப் பாய்ந்தான் ஒரு கட்டிளங் காளை. அவன் பாய்வையும் மீறிப் பாய்ந்தது காளை. கட்டிளங்குமரனின் தலை தப்பியது. ஆனால் தலையில் சூடியிருந்த முல்லை மாலை காளையின் கொம்பில் மாட்டிச் சிதறியது. சிதறிய ஒரு மலர் வேடிக்கை பார்த்து நின்ற கன்னியின் கூந்தலில் போய் பாய்ந்து செருகி நின்றது. பாய்ந்த முல்லை அவளது உடலில் நாணத்தின் விதையையும் பாய்ச்சியது. ஓர் ஆடவன் ஒரு முல்லை மலரை ஒரு கன்னியின் தலையில் சூட்டினால் அவனே காதலனாகிக் கணவனுமாகிக் கற்பைக் சூட்டியவன் ஆவான். இங்கோ முல்லை சிதறித்தான் கன்னியின் தலையில் பாய்ந்தது. ஆனாலும், அவன் அவள் உள்ளத்தில் சிதறாமல் பாய்ந்துவிட்டான். அவ்வுணர்வில் தான் நாணங்கொண்டாள். அந்நாணத்தைத் தொடர்ந்து அச்சமும் முளைத்துத் தலை தூக்கியது. தலையில் முல்லை மலர் செருகப்பட்டுள்ளதை இல்லத்திற்குச் சென்றதும் அன்னை காண்பாள். கண்டதும் 'ஏதடி தலையில் முல்லை? நீ மலர் சூடவும் அறியாதவள் ஆவாயே? எவனடீ செருகினான்?" – என வினவுவாளே என்று அஞ்சினாள். பாய்ந்த முல்லையைப் பறித்து எறிந்திருக்கலாம். பாய்ந்த முல்லையைப் பறிப்பது உள்ளத்தில் தோய்ந்த அன்பையே பறித்ததாகிக் கற்பையே

முறித்ததாகிவிடும். இவ்வாறு ஒருத்தியைச் சிக்கித் தவிக்க வைத்துக் காட்டுகின்றது கலித்தொகை.

இப்பேதைப் பெண் ஒன்று செய்து அச்சத்தைத் தவிர்த்திருக்கலாம். முல்லை மலர் வெளியே தெரியாமல் உள்ளே பொதிய வைத்துக் கூந்தலைக் கோதி முடித்திருக்கலாம். மறுநாளில் மலர் காய்ந்ததும் எடுத்து எறிவது தவறு ஆகாது. இதற்கும் அதே கலித்தொகை இடம் தரவில்லை.

இதுபோன்று சிக்கிக்கொண்ட ஒரு பெண்ணை அவளது தோழி கிண்டல் செய்து பேசுகின்றாள்:

31 தோழியே, எனது ஐம்பார் கூந்தலைக் காயவைத்துக் கொண்டிருந்தேன். முதல் நாள் நீராடிய எண்ணெய்யின் மணம் இல்லாமல் முல்லை மணம் கூந்தலிலிருந்து வீசியது. யாரும் அறியாமல் முதல் நாள் காதலன் சூட்டிய முல்லை தோய்ந்ததால் வந்த மணம் அது. எனது கூந்தலில் முல்லை மணம் வீசியதை அறிந்த எனது தமையன்மார் கொல்லும் காளைபோன்று சினந்து பாய்ந்தனர். என்னதான் பாய்ந்தாலும் உள்ளத்துள் பாய்ந்துள்ள காதலை ஓய்ந்து போகச் செய்ய முடியுமா? – என்று தலைவியின் நிலையைத் தன்மேல் ஏற்றிச் சொன்னாள்.

கன்னிப் பெண்ணைக் கொண்டு கலித்தொகை அறிவிக்கும் கருத்து யாது? முல்லைப்பூ தலையில் ஏறினால் காதல் தலைக்கேறிவிட்டது என்பதன்றோ! முல்லையை முடியிற் சூடினால் கற்பு முடிசூடிக்கொண்டதாகக் கொள்ளும் மரபு தமிழ் மரபாக இருந்தது.

---

31 “நறுநுதால் என்கொல்! ஐங்கூந்தல் உளர
சிறுமுல்லை நாறிய தற்குக் குறுமறுகு
பொல்லாது உடன்று அமர் செய்தார், அவன்கொண்ட
கொல்லேறு போலும் கதம்” - *கலித்தொகை : 105.*

இம்மரபு கொண்டே கற்புடைப் பெண்டிரது வழிபாடாம் இல்லுறை தெய்வ வழிபாட்டில் நெல்லுடன் முல்லை மலர் தூவப்படுவது மரபாக இருந்தது. இம்மரபு யாவரும் அறிந்த அடிப்பட்ட மரபாக இருந்ததால்தான் நெடுநல்வாடையும் நெல்லொடு தூவப்பட்ட மலர் இன்ன மலர் என்று வெளிப் படையாகக் குறிக்க வேண்டாது போயிற்று. சிலம்பும் மற் றோர் இடத்தில் "அலர்" என்று குறிப்பாக இசைத்தது.

**முல்லை – கற்பின் எல்லை.**

இப்படிப்பட்ட உலக வழக்கையெல்லாம் உள்ளத்துக் கொண்டுதான் தொல்காப்பியர் கற்புடன் இல்லத்தில் இருத் தலுக்கு [32] "முல்லைத் திணை" என்று பெயரிட்டார். நல்ல நோக்கத்திற்காகப் பிரிந்து சென்ற கணவர் மீளும் வரை இல்லத்தில் கலங்காது இருக்கும் கற்பு நிலையே "இல் இருத் தல்" என முல்லையாக இலக்கணம் விதிக்கப்பட்டது. இதனைக் [33] "கற்பு முல்லை" என்றது புறப்பொருள் வெண்பா மாலை. இல் இருத்தலாம் அடிப்படையைக் கொண்ட இலக்கியம் "முல்லைப்பாட்டு" என முல்லைப் பெயரால் அமைந்தது.

கற்பு என்பது கலங்கா நிலையது. [34] "கற்பென்னும் திண்மை" என்றார் திருவள்ளுவர். இக்கலங்காத் தன்மை யாம் நெஞ்சுரத்தை வேறு துறைகளில் காட்டிய ஆடவர், பெண்டிர் செயல்களும் கற்புக்குரிய "முல்லை" என்ற சொற் கூட்டி, "ஏருண் முல்லை" என்றும், "மூதின் முல்லை" என்றும் துறைகளாகப் புறப்பொருள் வெண்பா மாலையில் அமைக் கப்பட்டுள்ளன.

---

32 தொல்காப்பியம் : பொருளதிகாரம் : 16.
33 புறப்பொருள் வெண்பா மாலை : 13.
34 திருக்குறள் : 54.

நெல்லுடன் முல்லை.

இவ்வாறு கற்புக்கே உரித்தான முல்லை மலர் கற்புடை மகளிரது அடிப்படையில் அமைந்த இல்லுறை தெய்வ வழி பாட்டிற்கு நெல்லுடன் சொரியப்படும் பொருளாயிற்று. அந்தியில் செய்யப்படும் இவ்வழிபாட்டின் நோக்கம் இரவுப் பொழுது மங்கலப் பொழுதாகக் கழிந்து வாழ்வியல் நலம் விளைய வேண்டும் என்பதே.

வாழ்வியலில் வருங்கால நற்சொல் கேட்பது "விரிச்சி" எனப்படும். இவ்விரிச்சியை ஆடவரும் கூறுவர்; பெண்டிரும் கூறுவர். விரிச்சி கூறும் பெண் "கட்டுவிச்சி" எனப்படுவாள். இலக்கியங்கள் இவளைச் "செம்முது பெண்டிர்", "பெருமுது பெண்டிர்" என்னும்.

இக்கட்டுவிச்சி குறி சொல்லுவதற்கு அடித்தளமாக ஒரு முறத்தில் சில நெல்லைச் சிதறுவாள். விழுந்த நெல் எண்ணிக்கையையும், கிடக்கும் அமைப்பையும் வைத்துக்கொண்டு குறி சொல்லுவாள். இதனைத் [35] திருமங்கையாழ்வாரும் பாடிக் காட்டினார். விரிச்சி கூறுமுன் செய்யும் தொழுகைக்கும் நெல்லையும் நீரையும் பயன்படுத்தினர். [36] நெல்லை நீருடன் தூவியும் நெல்லை முல்லையுடன் தூவியும் வழிபடுவர். இதனைப் புறநானூறு பாடுகின்றது. நெல்லை நீருடன் தூவி வழிபடும் விரிச்சி பெரும்பாலும் இல்லற வாழ்வியல் அல்லாத நற்சொல்லுக்காக அமையும். நெல்லுடன் முல்லை கலந்து தூவப்படும் வழிபாடு இல்லற வாழ்வியல் நலங் கருதிய விரிச்சியாகவே அமைந்தது. ஒருநாழிப் படியில் நெல்லுடன்

[35] "காரார் குழல்கொண்டை கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகில் சில நெல் பிடித்தெறியா"
- சிறிய திருமடல் : 21, 22.

முல்லை மலரை நிறைத்துக் கொண்டு தூவி வழிபடுவர். இக்கருத்தையும் முல்லைப் பெயர்கொண்ட இலக்கியமாகிய முல்லைப்பாட்டு,

[37] "நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப"
— என்று பாடிக் காட்டியது.

கிடைக்கும் பலவகைச் சான்றுகளில் எல்லாம் வாழ்த்துக்கு உரிய மங்கலப் பொருளாக நெல்லும் மலருமே காணப் படுகின்றன. ஆனால், நிகழும் திருமண வாழ்த்து நிகழ்ச்சி களில் அவலப் பொருளாம் அரிசியே தூவப் படுகின்றது.

**நெல்மங்கலம்.**

தை பிறந்து வழி பிறந்ததும், வீட்டில் வளம் பெருக நெற்கதிரைப் புதிராகக் கொண்டு புகுவர். இஃது ஒரு மங்கல நிகழ்ச்சியாகவே கருதப்படும். உறவினர் இல்லங் களுக்கும் வளம் பெருக புதிர் நெல் அனுப்பி வாழ்த்துவர். வளத்தின் மங்கல அறிகுறியாக நெற்கதிரை மாலையாக்கி யும் தொகுத்தும் இல்லத்து வாயில் நிலைகளில் மங்கல தோரணமாகக் கட்டுவர்.

ஆனாலும், ஆயிரங் காலத்துப் பயிராகிய மணமக்களின் வாழ்த்திற்கு அவலப் பொருளாம் அரிசியையே தூவுவர்.

கரணங்களோடு (சடங்குகளோடு) நிகழும் திருமண நிகழ்ச்சியில் நெல் இடம் பெறும் நிகழ்ச்சிகளும் உண்டு. மணமக்கள் அமரும் இருக்கையாம் மணவறையில் நெல்லைப்

---

[36] "நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்
செம்முது பெண்டிர் சொல்லும்"
— புறநானூறு : 280 : 6, 7.

[37] முல்லைப்பாட்டு : 9 : 11.

பரப்புவர். அதன்மேல் புதுப்பாயை விரிப்பர். அதன்மேல் மணமக்களை அமர வைப்பர். மணமகளை இல்லத்துள் வர வேற்கும்போது மணமகளின் மடியில் நெல்லைப் பொதியை வைத்து நெல் வளத்துடன் அழைப்பர். மரத்தாலான படியில் நெல்லை நிரப்பி மணமகளின் கையில் ஏந்தச் செய்து இல்லத்துள் அழைப்பர். இதை "நிறை நாழி" என்பர். தாலிகட்டப்பட்ட பின் மரப்படியில் நாழி நெல் கொண்டு அதனை மங்கலப் பெண்டிர் ஏந்தி மணமக்களைச் சுற்றிக்காட்டி வாழ்த்துவர்.

முல்லை மலர் மாலைகளை மணமக்கள் கழுத்தில் அணிவிப்பர். முல்லை மலராலேயே மணமகளின் கூந்தலுக்கு ஒப்பனை செய்வர். சில குடும்பங்களில் மணமகனைக் கொண்டு மணமகள் கூந்தலில் முல்லைச் செண்டைச் சூட்டச் செய்யும் பழக்கம் இன்றும் உள்ளது. கழுத்தில் இடப்பட்ட முல்லை மாலையை முதியோர் எடுத்து இறைவனை வேண்டி மணமக்களை வாழ்த்துவதாக அணிவிப்பர். இருப்பினும் வாழ்த்துப் பொருளாகத் தூவப்படுவது அரிசிதான்.

இதற்கு மேலும் ஓர் அவலம் உண்டு. மஞ்சள் பூசாத வெள்ளரிசியை இரு கைகளாலும் பிடியாக அள்ளி மணமக்கள் இருவருக்குமாகச் சேர்த்துத் தொடையிலிருந்து மேலேற்றிச் சுற்றிச் சொரிந்து வாழ்த்துவர். இது "மணமிடுதல்" எனப்படும், இந்த அருமையான அவலத்தை மணமக்களது பெற்றோரும் நெருங்கிய உறவினருமே உரிமையுடன் செய்வர். ஆனல், இதே பெற்றோர், தம் மகளுக்கு அனுப்பும் பொருள்களில் அரிசியை அனுப்ப ஒப்பார். பிறந்தகத்திலிருந்து அரிசியை அனுப்புவது அவலம் என்று மறுப்பர். நெல்லை மகிழ்வுடன் அனுப்புவர். நீர் முகக்கும் குடத்தைப் பரிசாக வழங்கும்போது அதில் நீர் நிறைத்தோ, நெல் நிறைத்தோ, அத்துடன் மலர் தூவியோ வழங்குவர். புக்ககத்தில் மருமகள் புகும்போது தம் வீட்டிற்கு வரும் மருமகள் மங்கலத்துடன் வரவேண்டும் என்னும் குறிப்பில் நிறைநாழியுடன் வரவேற்பர்.

இவ்வாறு,

*வாழ்வில் பல முனைகளில் நெல்லும் முல்லையும் மங்கலப் பொருள்களாக விளங்கின.*

*திருமணம் முதலிய மங்கல நிகழ்ச்சிகளில் நெல்லும் முல்லையும் தூவப்படும் வாழ்த்துப் பொருள்களாக விளங்கின.*

*நெல் வளத்தின் சின்னமாகவும், முல்லை கற்பின் சின்ன மாகவும் விளங்கின.*

இருப்பினும் இவையிரண்டும் மணமக்களை வாழ்த்தச் சொரியப்படும் வாழ்த்துக் கலவையாகக் கொள்ளப்பட வில்லை. கொள்ளப்படவில்லை எனக் கூறலாமே அன்றிச் சொரியும் மரபு இல்லை என்று கூறக்கூடாது. நெல்லைச் சொரிந்து வாழ்த்தும் வழக்கம் அங்கொன்றும் இங்கொன்று மாகச் சில பழம் மரபுகளைக்கொண்ட பண்பட்ட குடும்பங் களில் இருந்து வருகின்றது.

**நெல், முல்லை வாழ்த்துக் கலவை.**

[38] "சில ஆண்டுகட்கு முன் காஞ்சிபுரத்தில் கிறிஸ்துவ சமயத் தொண்டாற்றிக்கொண்டிருந்த ஒரு ஸ்காட்லாந்து பாதிரியார் (மறைத்திரு ஆர். எல். மான்சென்) என் (டாக்டர் ந. சஞ்சீவி) உறவினர் ஒருவர் (திரு ப. கோ. நாதமுனி முதலியார்) திருமணத்திற்கு வந்தபோது அவர் கள் நாட்டுத் திருமணத்தின்போதும் உள்ள 'நெல் தூவல்' தமிழ்நாட்டிலிருந்து வந்த வழக்கமாகவே இருத்தல் கூடும் என்று என்னிடம் தெரிவித்தார்"

— என டாக்டர் ந. சஞ்சீவி

அவர்கள் தம் நூலில் குறித்துள்ளார்கள். இது நெல்லைத் தூவி வாழ்த்திய மரபின் தடத்தினைக் காட்டுகின்றது. இது தமிழக மரபு என்பதை மேல்நாட்டவர் ஒருவர் கூறி மகிழும் நிலையாவது ஒரு மன அமைதியைத் தருகின்றது.

---

38 ஆராய்ச்சிக் கட்டுரை பக்கம் 135.

இவ்வாறு நெல்லோடு முல்லையைத் தூவி வாழ்த்தும் மரபு பழந் தமிழகத்தில் இருந்தது என்றால் அம்மரபுக்குச் சான்று தமிழ் இலக்கியங்களில் உள்ளதா என்னும் வினா எழுதல் முறையானதே. மரபு என்றால் இலக்கியச் சான்று இல்லாமலா போகும்!

பழங்காலத் திருமண நிகழ்ச்சி "வதுவை மணம்" எனப்பட்டது. இவ்வதுவை மணத்தின் அக்கால முறையை அகநானூறு அறிவிக்கின்றது. "உழுந்து தலைப்பெய்த" என்று துவங்கும் அப்பாடல் மறையவர் இடம் பெற்றதாகவோ, கரணங்கள் நிகழ்ந்ததாகவோ செய்திகளைத் தரவில்லை. மங்கலப் பெண்களே இடம்பெற்ற நிகழ்ச்சிகளைக் காட்டுகின்றது. பின் வருவன அவை:

'மனைவிளக்கு வைத்தனர். கும்மிருட்டு அகன்று கிழக்கு வெளுத்து வரும் காலைப் பொழுது அது. மாலைகளைத் தொங்கவிட்டு மணவறை அமைத்தனர். மக்களைப் பெற்றெடுத்த மங்கல அணி மகளிர் நால்வர் கூடினர். "கற்பில் தவறாது வாழ்க! இல்லற நலன்கள் பலவற்றை இல்லத் தலைவனுக்கு உதவுக! கணவனுக்கு உகந்த மனைவி ஆகுக" என வாழ்த்துக் கூறினர். கூறி வாழ்த்துக் கலவையாக நீருடன் முல்லைப் பூவையும் நெல்லையும் சொரிந்தனர். சொரியப்பட்ட முல்லை மலரும் நெல்லும் கருங்கூந்தலில் அமைந்து விளங்க வதுவை மணம் நிகழ்ந்தது.

இதனை,

[39] "நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி (முல்லை)
பல்லிருங் கூந்தல் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணம் கழிந்த பின்றை" — என்று அப்பாடல் கூறுகின்றது.

---

39 அகநானூறு: 86 15—17.

மணநிகழ்ச்சியில் தமிழ்ச் சான்றோர் இடம் பெறுதல் உண்டு. ஆயினும் அன்னோர் சான்றுக்காகவே அமைவர். நிகழ்ச்சிகள் யாவற்றையும் மங்கல மகளிரே நிகழ்த்துவர். அக்காலத் திருமணமே பெண்கள் பகுதியாகத்தான் இருந்தது. அப்பகுதியிலும் மணமக்களை வாழ்த்துவதே மணநிகழ்ச்சியில் இன்றியமையாததாக இருந்தது. அவ்வாழ்த்துக்குத் தூவப்பட்ட மங்கலப் பொருளாக நீருடன் நெல்லும் மலருமே (அம்மலர் முல்லை மலர் என்பதை முன்னர் காட்டிய சான்றுகளால் உணரலாம்.) கைக்கொள்ளப்பட்டன.

அகநானூற்றுப் பாடலின்படி அக்காலத் திருமணத்தில் கரணங்களோ மறையவரோ வடமொழி மந்திரமோ இடம் பெறவில்லை. கரணம் உண்டானதைக் குறிக்கும் தொல்காப்பியம் அதற்குரிய காரணத்தையும் குறிக்கின்றது:

40 'மக்களுக்குள் பொய்யும் ஒழுக்கக் குறைபாடும் தோன்றி நாணயம் குன்றியதால்தான் சான்றோர் கரணத்தை வகுத்தனர்' — எனத் தொல்காப்பிய நூற்பா காட்டுகின்றது. எனவே, 'நாணயம் உள்ள மக்கட்குக் கரணம் வேண்டாத ஒன்று' என்ற கருத்தையும் அதனால் பெற முடிகின்றது.

இவ்வாறு உண்டாக்கப்பட்ட கரணமும் வாய்ப்பும் வளமும் கொண்டு இன்ப நாட்டத்தில் திளைத்த மேலினத்து (மறையவர், மன்னவர், வணிகர் மூவர்) மக்களுக்காகத் தான் கொள்ளப்பட்டது. உழைப்பில் ஊன்றி அளவான வாழ்வில் நின்ற வேளாளர் — உழவர் பெருமக்கள் கரணத்தைக் கொள்ளாமலே மண நிகழ்ச்சியை நிகழ்த்தினர்.

---

40 "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் (தலைவர்) யாத்தனர் கரணம் என்ப"
— தொல்: பொருள்: 143.

இச்செய்தியையும் தொல்காப்பியம் மிகத்திறம்படக் கூறு கின்றது :

"மறையவர், மன்னவர், வணிகர் ஆகிய மூவர்க்கும் கரணம் பொருத்தப்பட்டது. (அவர்களே விரும்பி ஏற் காமல் பொய், வழு காரணமாகப் பிறரால் சேர்க்கப்பட்டது என்பதைக் குறிக்க, "புணர்த்த கரணம்" என்றூர்) அக் கரணம் பின்னர் கீழ் மக்களாகக் கருதப்பட்ட உழவர்க்கு ஏற்றப்பட்ட காலமும் உண்டு.

இதனைத் தொல்காப்பியர் சொல்லாகக் காணலாம்:

[41] "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க் காகிய காலமும் உண்டே" — என்பது

அந்நூற்பா.

மேலும் தமிழ்ச் சான்றோர் வகுத்த அக்காலக் கரணம் தமிழர் அல்லாத வேற்று மொழியினர் இடம் பெறும் கரணமாக அமைந்திருக்காது.

[42] ஆனல், சிலப்பதிகாரம் காட்டுகின்ற திருமணத்தில் மாமுது பார்ப்பனர் புகுந்துவிட்டார். மறைக்கு வழி திறந்து விடப்பட்டது. தீவலம் வரத் துவங்கிவிட்டனர். ஆனாலும் அரிசி தூவப்படவில்லை. அது மறைவழி காட்டியதில் மறைந்துகொண்டுள்ளதோ என்னவோ?

கரணம் புகுந்த சிலம்புத் திருமணத்திலும் ஒரு பகுதியைத் தான் மறையவர் பற்றிக்கொண்டுள்ளார். மற்றொரு பகுதி மகளிர்பால் இருந்ததை அறிகின்றோம். மகளிர் பகுதியில் நெல்லைக் காணுது போயினும் சில மலர்கொண்டு தூவி வாழ்த்தியதைக் காண முடிகின்றது.

---

41 தொல்: பொருள்: 142.

42 மாமுது பார்ப்பான் மறைவழி காட்டத்
தீவலஞ் செய்வது காண்பார்கண் நோன்பென்னை"
— சிலம்பு: 1: 51, 52

சிலப்பதிகாரக் காலம் வடவர் மரபும் வடமொழியும் ஊடையின்றிப் புகுந்து காலூன்றத் தொடங்கிய காலம். இக்காலத்திலேயே நெல்லும் முல்லையும் கலந்து தூவப்பட்ட மரபு அருகத் தொடங்கியது போலும்.

சிலம்புக்குப் பின்னர் எழுந்த இலக்கியங்கள் காட்டும் திருமணங்கள் படிப்படியாகக் கரணங்களைப் பெருக்கிக் கொண்ட வரலாற்றைத்தான் படைக்கின்றன.

ஒரு மணமகள். வாழ்நாளெல்லாம் அவள் மணமகளாகவே திகழ்ந்தவள். நனவுலகிலும் மணமகள்; கனவுலகிலும் மணமகள். அவள்கொண்ட திருமணம் கனவுலகத்தில். அக் கனவுத் திருமணத்தை அவளே பாடிக் களித்தாள்: தன் தோழியிடம் பாடிக் களித்தாள்:

43 "பூரண பொற்குடம் வைத்துப் புரமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீநான்"
"மந்திரக் கோடி யுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கனாக்கண்டேன் தோழீநான்"
"காப்புநாண் கட்டக் கனாக்கண்டேன் தோழீநான்"
"தீவலஞ் செய்யக் கனாக்கண்டேன் தோழீநான்"
"அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீநான்"
"பொரிமுகந் தட்டக் கனாக்கண்டேன் தோழீநான்" –பாடிக் களித்தவள் வைணவப் பெருமகள் ஆண்டாள் நாச்சியார். "வாரணம் ஆயிரம்" என்று தொடங்கும் இப்பத்துப் பாடல்களிலும் திருமணக்காட்சியே விளங்குகின்றது. ஆண்டாளது பாடல் திருமணச் சடங்கில் வளர்ச்சியைக் காட்டுகின்றது. "காப்பு கயறு கட்டல்", "அம்மி மிதித்தல்", "பொரிமுகந்து அட்டல்" ஆகியவை முளைத்தவற்றை அறிகின்றோம். ஆண்டாள் நாச்சி தன் காலத்தில் நாட்டில் நிகழ்ந்த வழக்கையே கொண்டு காட்டினாள்.

---

43 நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்: நாச்சியார் திருமொழி: "வாரணமாயிரம்": 1, 3, 4; 7, 8, 9.

ஆண்டாளுக்குப் பின் வந்த கம்பரும் திருமணத்தில் இக்கரணங்கள் அமைந்ததைக் காட்டுகின்றார் :

மிதிலையில் சீதைக்கும் இராமனுக்கும் திருமணம்.

44 "இடம்படு தோளவ னோடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதின்"

— என்று மணமங்கலத்தில் மறையோர் வேள்வி செய்ததையும், மணமக்கள் அதனைச் சுற்றி வந்ததையும் காட்டினர்.

45 "வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்பொரி செய்வன செய்பொருள் முற்றி
இலங்கொளி அம்மி மிதித்தெதிர் ஏறிக்
கலங்கலில் கற்பின் அருந்ததி கண்டார்"

— என்று தீயை வணங்கியதையும், பொரி தூவியதையும், அம்மி மிதித்ததையும், அருந்ததி கண்டதையும் கொண்டு காட்டினர். கம்பரும் தம் காலத்துத் தமிழ்நாட்டு நிகழ்ச்சிகளை நினைவிற்கொண்டு பாடினர்.

ஆயினும் இவற்றுள்ளும் அரிசியைத் தூவி வாழ்த்திய செய்தி இல்லை. மலரையோ நெல்லையோ தூவி வாழ்த்திய செய்தியினை எதிர் பார்ப்பதற்கு இல்லை.

மேலே காணப்பட்ட கரணங்களுடன் மேலும் பொருளற்றவையும் கூடின. கூடிய பொருளற்றவை காலப்போக்கில் பொருள் மாறியும் நடந்து வருகின்றன. அவற்றுள் ஒன்று "அரசாணிக்கால்" நிகழ்ச்சி.

திருமணத்தில் "அரசாணிக்கால் நடல்" என்னும் ஒரு நிகழ்ச்சி இடம் பெறுவதை அறிவோம். மணவறையில் மங்கல நிகழ்ச்சி துவங்குவதற்கு முன்னர் அரச மரத்துப் பசுங்கிளை ஒன்றை இலைகளை நீக்கிக் கொணர்வர். அதற்குச்

---

44 கம்பராமாயணம் : கடிமணப் படலம் : 91.

45 கம்பராமாயணம் : கடிமணப் படலம் : 92.

சந்தனம் பூசி, மஞ்சள் காப்புக் கட்டிப் பட்டுக் கட்டுவர். மங்கல இசையுடன் மங்கல மகளிர் மூவரோ ஐவரோ கைப் பிடித்து மணவறை முன்னே நடுவர். இக்காலத்தில் அரசங் கிளையை விட்டு ஒதிய மரத்துக் கிளையை நட்டு நிகழ்த்துவர்.

அரசங்கிளையைக் காலாக ஊன்றியதால் "அரசாணிக் கால்" எனத் தவருகக் கருதினர்.

திருமணத்திற்கும் அரச மரத்திற்கும் என்ன தொடர்பு? மணவறை முன்னே அதனை நடுவதில் என்ன கருத்திருக் கிறது? எக்கருத்தும் இல்லைதான். ஆனல், இந்நிகழ்ச்சி வேறு ஒரு பொருத்தமானதும் சிறப்பானதுமான காரணத் தால் தோன்றியது. அஃது என்ன?

முன்காலத்தில் மக்கள் தொகை குறைவு. இக்காலத்து ஓர் ஊராட்சி மன்றத்து அளவு எல்லையைக் கொண்ட ஒரு சிறு பகுதிக்குக் கூட குறுநில மன்னன் என்ற பெயரிலோ வேள் என்ற பெயரிலோ, வள்ளல் என்ற சிறப்பிலோ ஒரு மன்னன் தலைவனுக இருப்பான். அப்பகுதியில் ஒருவர் இல்லத்தில் ஏதேனும் நிகழ்ச்சி நிகழுவதானல், அவர் மன்னனை அணுகி விவரம் கூறுவார். அந்நிகழ்ச்சிக்கு அரசனது இசைவு ஆணையை வழங்குமாறும் வேண்டுவார். நிகழ்ச்சிக்கு வருகைதந்து வாழ்த்த வேண்டுமென்று வேண்டு வார். அரசனும் வேண்டுகோளை ஏற்று நிகழ்ச்சிக்கு இசைவு தருவான். தக்க அலுவலர் வழி தனது இசைவு ஆணையை யும் வழங்குவான். இது குடிமக்கள் மன்னனை தம் குடித் தலைவனுகவே கருதிப் போற்றினர் என்பதற்கும் அறிகுறி யாகும்.

நிகழ்ச்சிக்கு இசைவு ஆணை வழங்கிய மன்னன் நிகழ்ச்சிக்கு ஏற்ப வருகை தந்து சிறப்பிப்பான்; வாழ்த்தி மகிழ்விப்பான். நிகழ்ச்சிகள் பலவாக அமையின் தனது வருகையின் அறிகுறியாக, தனது செங்கோலை அனுப்பும்

கருத்தில் ஒரு கோலை உரியார் வழி அனுப்புவான். அக்கோல் அரசனது இசைவு ஆணையை அறிவிக்கும் கோலாகவும் அமையும்.

அக்கோல் வருவதை நிகழ்ச்சி நடத்துவோர் அரசனது வருகையாகவே கொள்வர். அரசனை வரவேற்பதுபோன்றே மங்கல இசையுடன் வரவேற்று, சந்தனம் பூசி, மாலையணிவித்து வரவேற்பர். பட்டு அணிவித்து மதிப்பளிப்பர். செல்வம் படைத்தோர் பொன்கட்டுவர். எளியோர் அதன் பாங்கில் மஞ்சள் கட்டுவர். அரசனே வந்திருப்பதாகக் கருதி மணமக்கள் முன்னே அமரவைப்பதுபோல் அக்கோலை நடுவர். அவன் வாழ்த்துவதாகக் கருதி மங்கலத்தை நிறைவேற்றி மகிழ்வர்.

அக்கோல்— கால் அரசனது ஆணைபெற்ற கால் என்னும் கருத்தில் அரசன் ஆணை கால் — அரசு ஆணை கால் — "அரசாணைக்கால்" எனப் பெயர் பெற்றது. இஃதே காலப் போக்கில் "அரசாணிக்கால்" என மருவிற்று. அஃது அரச மரத்துக் காலாகியது. பிற்காலத்தில் அக்கால் நடப்பட்டு விரைந்து தழைக்கவேண்டும் என்னும் ஆர்வத்தில் ஒதியங் காலாக மாறியது.

இந்த "அரசாணி" இலக்கியத்திலும் ஏறிற்று.

ஆண்டாள் நாச்சியாரது தந்தையார் பெரியாழ்வார் ஒரு தாயின் வாயில் வைத்துப் பேசவைத்தார். காதல் குறும்பன் கண்ணன் ஒரு கன்னியை "இழுத்துக்கொண்டு" போய்விட்டான். பறிகொடுத்த தாய் அவளை நினைந்து புலம்புகின்ருள் :

"கொண்டுபோன என் குமரிக்கு மணக்கோலஞ் செய்வர். மணவீட்டில் வைப்பர். ஊரார் யாவரும் அறியுமாறு இப்பெண் கண்ணனுக்கு இவள் மணமகள் என்று சாற்றுவர்.

என் மகள் தேவருலகத் தேவி ஆவாள். அவள் "அரசாணியை வழிபடுவாள். மங்கலப் பறை முழங்க மணம் நிகழும்" என்று கற்பனைசெய்து புலம்புவதாகப் பாடிய பாடல் இது;

46 குமரி மணஞ்செய்து கொண்டு
கோலஞ்செய் தில்லத் திருத்தித்
தமரும் பிறரும் அறியத்
தாமோ தரர்க்கென்று சாற்றி
அமரர் பதியுடைத் தேவி
"அரசாணியை" வழி பட்டுத்
துமிலம் எழப்பறை கொட்டித்
தோரணம் நாட்டிடுங் கொல்லோ?

அரசன் ஆணைபெற்ற கால் என்னும் பொருத்தத்தோடு தோன்றி அரசமரத்து ஆணிக்கால் என்று பொருளற்றுப் போயிற்று. இன்னும் அந்தப் பொருளற்ற வழக்கம் நீடித்து வருகின்றது. அரசன் ஆட்சி என்பது மறைந்தது. அரசனது ஆணைபெற்று இல்லத்து நிகழ்ச்சியைக் காண வேண்டும் என்பதும் இல்லை. ஆயினும் "அரசன் ஆணைக்கால்" நிகழ்ச்சி உள்ளது. அஃதும் "அரசாணி" ஆக உள்ளது நகைப்புக்கு உரிய ஒன்று.

காலம் இவ்வாறு கோலத்தை மாற்றினாலும் வாழ்த்துப் பொருளாக நெல்லையும் முல்லையையும் சொரிந்தது முற்காலத்தின் அடிப்பட்ட தமிழ் மரபு என்பது கல்லெழுத்தாகும்.

இவ்விரு பொருள்களையும் வாழ்த்துக் கலவையாகக் கலப்பதில் ஒரு தனிக்கருத்து உளது; நல்ல பொருத்தமும் உண்டு.

46 பெரியாழ்வார் திருமொழி: நல்லதோர் தாமரை: 3

**ஆண்மையின் சின்னம்;**

**பெண்மையின் சின்னம்.**

நெல் ஆடவரது உழைப்பின் வெற்றிப் பயன்; வளத்தின் சின்னம் முல்லை மலர் மகளிரது கற்பின் முழு உருவம்: மணத்தின் சின்னம். ஆணும் பெண்ணும் இணையும் இல்லற விழாவில் ஆண்மையின் உழைப்புச் சின்னமும், பெண்மையின் கற்புச் சின்னமும் இணைதல் கருத்துக்களின் இணைப்பாகும்; பொருள்பொதிந்த பொருத்தமும் ஆகின்றது. இவ்விரண்டும் கருதியே பழந்தமிழர் இம்மரபைக் கைக்கொண்டனர்.

அரிசியை வாழ்த்துக் கலவையாகக் கொள்ளுவதில் கருத்தும் இல்லை; களிப்பும் இல்லை. இரண்டும் அற்ற இந்த மரபு எவ்வாறு புகுந்தது?

**தமிழ் மரபு தடம் புரண்டது.**

வடபுலத்தாராக வந்து தமிழரிடையே இடங் கொண்டோர் தமிழரது உழைப்பைக் கொண்டே பயன் பெற்றனர்; வாழ்ந்தனர். தாம் ஆற்றும் மறைவழிப் பணி களுக்கு ஊதியம் — கூலி என்றில்லாமல் காணிக்கை என்று பெற்றனர். காணிக்கையாகப் பெறப்படும் பொருள்கள் உடனே பயன்படுத்தத் தக்கனவாக இருத்தல் வேண்டும் என விரும்பினர். நெல்லைக் காணிக்கையாகப் பெறுவதை விட அரிசியைப் பெறுவதே அவருக்குப் பயன்படுத்த எளிதாக இருந்தது. (ஐயமிடும்போதும் அரிசியையோ சோற்றையோதான் இடுகின்றோம்; நெல்லையோ இடுவோம்?) அதனால் அவர் அரிசியே மேல் எனக்கொண்டனர். அதனை அன்னார் அவலப் பொருளாகக் கொள்வதில்லை. அவ்வாறு கொள்ளாததை இன்றும் அன்னார் கைக்கொண்டு வரும் பழக்கங்களாலும் உணரலாம். ஒன்று காணலாம்:

பார்ப்பனர் இல்லங்களில் நிகழும் நல்ல நிகழ்ச்சி களுக்குச் செல்லும் அன்னரது நெருங்கிய உறவினர் ஒரு

பாண்டத்தில் அரிசியையும் தேங்காயையும் கொண்டு செல்வர். புத்தாடை உடுத்திப் புதுப்பொலிவுடன் செல்வர். அதற்கு மாற்று வரிசையாக விழாவை நிகழ்த்துவோர் முறுக்கு சீடை முதலிய தின்பண்டங்களைக் கொடுத் தனுப்புவர்.

தமிழர் இவ்வாறு பாண்டத்தில் அரிசியையும் தேங்காயை யும் உறவினர் இல்லத்திற்கு ஏந்திச் செல்வதுண்டு. அஃது எது கருதி? எப்பொழுது? யாவரும் அறிவோம். அவற்றை எடுத்துச் செல்வது புத்தாடை உடுத்தியன்று; பழைய உடையுடன் முக்காடிட்டுச் செல்வர். ஒய்யார மகிழ்ச்சி யுடன் அன்று; ஒப்பாரி வைத்து ஓலமிட்டுச் செல்வர். ஆம், சாவு நேர்ந்த இல்லத்திற்குப் பிணத்திற்குரிய வாய்க்கரிசி யாகவே அரிசியைக் கொண்டு செல்வது தமிழ் மரபு.

எனவே, அரிசி தமிழர்க்குப் பொது நிகழ்ச்சிகளிலோ தனி நிகழ்ச்சிகளிலோ மங்கலப் பொருள் அன்று; ஆரியர்க்கு அவலப் பொருளும் அன்று. அரிசி தமிழர்க்கு அவலப் பொருள் என்பதை ஆரியர் அறிந்துவைத்திருந்தனர். ஆயினும், தமக்கு எளிதாகும் வாய்ப்பை நினைந்தும், தம் மரபுக்கு ஏற்பவும், தம் மொழி புகுத்தியும் தமிழர் மரபை மறையச் செய்தனர். அன்னார் மறைவழிச் செய்யும் கரண நிகழ்ச்சிகளில் நீராட்டும் கரணம் ஒன்று. இந்த நீராட்டும் நிகழ்ச்சியின்போது பால், தயிர், எண்ணெய், பழச்சாறு முதலியவற்றைக் கொள்வர். சில நேரங்களில் நீராட்டத் தயிர் இல்லாதுபோனால், அதற்காகக் காத்திராமல் இருக் கும் பாலில் எலுமிச்சைச் சாற்றில் ஒரு துளி விட்டு அது தயிர் ஆகிவிட்டதாகக் கொண்டு கரணம் செய்து முடித்தலைக் காண்கின்றோம். பாலையே தயிராகக் கொண்டு அமைதி செய்துகொள்வர். இதுபோன்றே ஓர் இல்லத்தின் மண நிகழ்ச்சியின்போது வாழ்த்துப் பொருளாக நெல் இல்லாத சூழ்நிலையில் அந்நேரத்தை வாய்ப்பாக்கிக்கொண்டு அந் நிகழ்ச்சி தடங்கலில்லாது நிகழ இருக்கும் அரிசியைப் பயன்

படுத்தியிருப்பர். அரிசி அவலப்பொருள், மங்கலப் பொருளன்று என்பதால் வெள்ளரிசியாகக் கொள்ளாமல் அதன் மேல் மஞ்சள் கலந்து மங்கலப் பொருளாக்கினர். மேலும், அரிசிமேல் மஞ்சள் ஏறினால் நெல் நிறமாகும். எனவே, அவ்வரிசி நெல் போன்றதே என்று அமைதி காட்டவும் வாய்ப்பாயிற்று. இவ்வாறு ஒரு சூழலில் நேர்ந்த மாற்றமே சிறிது சிறிதாக வளர்ந்து அவர்களது வாய்ப்பிற்கு ஏற்ப அரிசியையே பயன்படுத்தும் பழக்கம் ஏறியது. அதே மரபாகவும் ஆக்கப்பட்டது. இவ்வாறும் நேர்ந்திருக்கலாம்.

எவ்வாருயினும் கருத்தாழம் மிக்க தமிழர் மரபு தடம் மாறிப் போயிற்று என்பது வருந்தற்குரியது. இதுபோன்று வருந்தற்குரியதும், தமிழினத்தைத் தாழ்வு படுத்துவதும், தமிழ் மொழியே நீக்கப்பட்டதுமான நிகழ்ச்சிகள் மீண்டும் புதுப்பித்தற்குரியனவாகும். இது தன்மான உணர்வில் நிற்கவேண்டிய ஒன்ருகின்றது.

